**உங்கள் அச்சத்தைப்**
**போக்குகிறோம்- நிச்சயமாக!**
**முதலீட்டை நீங்கள்**
**நிச்சயமாகத் திரும்ப**
**அடைவதற்கு எமது**
**உத்திரவாதம்:**

**18%**
வட்டி அத்தோடு, வெள்ளிப் பரிசும் கூட!

**பாங்க் ரோக்கப் பத்திரம் அதனுல்தான்,**
**இந்து உங்களுக்கு உகந்தது!**

நம்பி ஒப்படைத்த உங்கள் சேமிப்புக்கு வங்கி ரொக்கப் பத்திரங்கள் வாயிலாக உத்திரவாதம் தந்து உறுதியளிக்கிறது—இந்து.

நிதி விவகாரங்களில் வெகு நாணயமான வார்ப்பு இந்து என்ற உண்மையை நிரூபிக்கும் தன்னிகரற்ற, உன்னதமான உத்திரவாதம் இது. தமது பணத்தையும், மற்றவர் நிதியையும், நாணயமாயும் நல்ல பல... தரும் வகையிலும் நிர்வகிக்கும் நிபுணத்துவமே இந்துவின் இந்த தைரியத்துக்கு மூலகாரணம்.

உங்களுக்கு இலாபகரமான பலவற்றைச் செய்யவல்லது—இந்து.




## இந்து பைனன்ஷியர்ஸ் (Regd.)

நிர்வாக அலுவலகம்
H. O. 155, வடக்கு உஸ்மான் சாலை
தி. நகர், சென்னை-600 017. போன் : 445529

கிளைகள் :

155, வடக்கு உஸ்மான் சாலை, தி நகர்,
சென்னை-600 017. போன் : 445529

32, ரங்கநாதன் தெரு, தி. நகர்.
சென்னை-600 017. போன் : 445246

220, என். எஸ். ஸி. போஸ் ரோடு.
சென்னை-600 001.

24, வடக்கு மாடவீதி, பூவிருந்தவல்லி,
சென்னை-600 056. போன் : 69566

194, வக்கீல் புதுத் தெரு. மதுரை-625 001
போன்: 34940

106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606 601
போன்: 681

22, வணிகர் தெரு, காஞ்சிபுரம்-631 201
போன்: 3048

41, தொப்பா முதலியார் தெரு,
பெங்களூர்-560 001. போன் : 579585

UIPC: IF: 215




வணக்கம்

தங்கள் 24.6.84 கல்கி வார இதழில் பொற்கோயில் வளாகத்தில் நாட்டின் ஒருமைப்பாட்டிற்காக உயிர்த் தியாகம் செய்த இராணுவ வீரர் எம். குப்புசாமியின் குடும்ப நிலைகளை விசேஷ நிருபரை அனுப்பித் தகுந்த நேரத்தில் கல்கி வாசகர்களுக்கு முழு விவரத்தையும் தெரிவித்து அன்னாருக்கு அஞ்சலி செலுத்தியதுகுறித்து நாங்களும் தலைவணங்கி அன்னாருக்கு அஞ்சலி செலுத்துகிறோம்.

மத்திய, மாநில அரசுகள் அதன் கடமைகளைச் செய்தபோதிலும் பொது மக்களும் அதில் பங்கு கொள்ள வேண்டுமெனக்கருதி அவரின் குடும்ப நல நிதியாக ரூபாய் ஐம்பது வசூல் செய்து அனுப்பியுள்ளோம்.

இதனை கல்கி மூலம் மேலும் வளரச் செய்து தாங்களே அவரின் மனைவியிடம் அளிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். இராணுவ வீரர்களின் கஷ்டங்களில்பொது மக்களுக்கும் பங்கு உண்டு என்பதனை எடுத்துக்காட்ட ஒரு வாய்ப்பு ஏற்படுத்துமாறு வேண்டிக் கொள்கிறோம்.

ச. சதானந்தம்,

எஸ். எஸ். ஸ்டுடியோ,
81, சன்னதி தெரு,
கடலூர்–607 002.

திரு சதானந்தம் மூலம் கடலூர் அன்பர்கள் சிலர் சேர்ந்து ரூ. 50 வசூலித்து அனுப்பியுள்ளனர். இத்துடன் கல்கி நிறுவனத்தில் நன்கொடை ரூ. 100 சேர்த்து அமரர் குப்புசாமியின் மனைவி காசியம்மாளுக்கு அனுப்பியுள்ளோம்.

—ஆசிரியர்

## ராணுவமும் மக்களும்

நன்கொடை அளித்தோர் விவரம்:

| | ரூபாயில் |
|---|---|
| எஸ். சதானந்தம் (மாஜி இராணுவ வீரர்) | 5.00 |
| சரோஜா வைத்தியநாதன் (டி.பி. டி.ஸி.) | 2.00 |
| எஸ். பாவாடை முதலியார், நிர்வாக அறங்காவலர் அருள்மிகு தளத்துக்காட்டம்மன் கோயில் | 5.00 |
| எம். கோவிந்தராஜுலு | 2.00 |
| கே. தேவநாதன் சங்கர் ஜுவல்லரி | 2.00 |
| வை. சரவணன், நியூஸ்டுடியோ | 5.00 |
| இரா. இராஜவேலு | 5.00 |
| வி. ஜெகன்னாதன் (மாஜி இராணுவ வீரர்) | 5.00 |
| டி. அசோக் | 2.00 |
| கே. நாராயணன் | 1.00 |
| பி. தமிழரசன், | 2.00 |
| க. ப. செல்வம், செல்வம் ரைஸ்மில் | 10.00 |
| எஸ். கிருஷ்ணமூர்த்தி | 2.00 |
| எஸ். சபாலீஸ்வரன் (மணியம் ஸ்டுடியோ) | 2.00 |
| கல்கி நிறுவனம் | 100.00 |
| ஆக மொத்தம்: | 150.00 |

மேலும் நன்கொடை வழங்க விரும்புவோருக்கு முகவரி:

திருமதி காசியம்மாள்,
W/o. அமரர் எம். குப்புசாமி,
சின்னகாயப்பட்டு கிராமம்,
செங்கம் வழி,
வட ஆர்க்காடு மாவட்டம்.

✖ பொற்கோவில் வளாகத்தில் நாட்டின் ஒருமைப் பாட்டுக்காக உயிர்த்தியாகம் செய்த ராணுவ வீரர் எம். குப்புசாமி



அடுத்தவாரம் **கல்கி** ஆண்டுமலர்

இலவச இணைப்பு

## வாழ்க்கை வளம் பெற...



வருவாயைப் பெருக்கிக் கொள்ள எளிய காரிய சாத்தியமான யோசனைகளை அனுபவ பூர்வமாக வெற்றிகண்டவர்கள் கூறுகிறார்கள்.



## ஊஹலே...ஸ்!

நமது திரை உலக நிருபர் சம்பத்தி 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்கினாலும் வம்பு அவரைப் பின் துரத்தி வருகிறதே: என்ன செய்ய?

## பிரமுகர் வரிசை



ஸண்டே போன்ற செய்திச் சஞ்சிகைகளில் எழுதிப் பெரும் புகழ் பெற்றுள்ள அனிதா பிரதாப் தாம் சந்தித்த பிரமுகர்கள், தலைவர்கள் பற்றிக் கூறுகிறார். முதலில்: ஜெயவர்த்தனே!



## யோகாசன மகிமை

ஆரோக்கியமான வாழ்க்கைக்கு ஆசன முறைகள், அவற்றைப் படிப்படியாகப் பழகும் விதங்கள்: இவற்றைக் கூறுவதோடு பலன்களை விஞ்ஞான ரீதியாக விளக்கும் கட்டுரைத் தொடர்.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி.



## ரூ 1000 முதல் பரிசு

பெறும் சிறுகதை: மற்றும் பரிசு பெற்றவர்கள் பற்றிய விவரங்கள்.

## நீங்கள் கேட்டவை

பதில்கள்: - தராசு




நடுநிலையிலிருந்து கடச்கட பதிலளித்ததால் பல்லாயிரக்கணக்கானோரைக் கவர்ந்து மகிழ்வித்த பகுதி மறுபடி ஆரம்பமாகிறது.


இந்துமதி எழுதும்
நெருப்பு மலர்
நவீனத் தொடர்கதை
கல்கி
ஆகஸ்ட் 5ல்
ஆண்டுமலரில்
ஆரம்பம்.

அலசல்

# புரிகிறதா...

ஸ்வராஜ்பால், டி. ஸி. எம்.; எஸ்கார்ட்ஸ், எல். ஐ. ஸி இந்த நான்கும் சம்பந்தப்பட்ட கண்ணாமூச்சி விளையாட்டு பலருக்கும் புரிந்து கொள்ளக் கஷ்டமான விஷயம். இந்த முழுக் கதையையும் எல்லோருக்கும் புரியும்படி எளிய நடையில் எழுதுகிறார் நமது நிருபர்.

இந்தக் கதைக்கு முதலில் ஒரு சில அறிமுகங்கள் அவசியம். அவற்றைப் பார்ப்போம்.

**யார் இந்த ஸ்வராஜ்பால்?** பிரிட்டிஷ் குடியுரிமை பெற்றுள்ள பஞ்சாபி. தற்போது இங்கிலாந்தில் இருக்கிறார். இந்த ஐம்பத்திரண்டு வயது தொழிலதிபர், காபாரோ க்ரூப்பைச் சேர்ந்த பதிமூன்று கம்பெனிகளின் சேர்மன். இவரது குடும்பத்தைச் சேர்ந்த அபீஜே கம்பெனி சில வருடங்களுக்கு முன்னால் மந்திரிகள் சிலர் சம்பந்தப்பட்ட லஞ்ச ஊழல் விவகாரத்தில் ஈடுபட்டிருந்தது.

வெளிநாடுகளில் உள்ள இந்தியர்கள் இந்தியக் கம்பெனிகளில் முதலீடு செய்யலாம். சமீப காலமாக இத்தகைய முதலீடு செய்வதற்கான விதிகளைத் தளர்த்தியுள்ளது இந்திய அரசு. காபாரோ குரூப் கம்பெனிகள் இந்தியாவில் எஸ்கார்ட்ஸ் மற்றும் டி. ஸி. எம். நிறுவனங்களின் ஷேர்களை வாங்க ஆரம்பித்தன. புதுடில்லியில் உள்ள ஷேர் புரோக்கர்கள் மூலம் இவ்வாறு வாங்கப்பட்ட ஷேர்களின் மதிப்பு பதிமூன்று கோடி ரூபாய்.

**டி. ஸி. எம். — சில வார்த்தைகள்:** டெல்லி க்ளாத் அண்டு ஜெனரல் மில்ஸ் என்ற (டி. ஸி. எம்.) நிறுவனம் இந்தியாவின் மிகப் பெரிய நிறுவனங்களில் ஒன்று — 25,000 பங்கு தாரர்கள் ரூபாய் 21.34 கோடிக்கு ஷேர்கள் வைத்துள்ளார்கள். துணி வகைகள் மட்டும் அல்லாமல் காஸ்டிக் சோடா, குளோரின் போன்ற இரசாயன பொருட்கள், வனஸ்பதி சமாச்சாரங்கள், ஆல்கஹால், உர வகைகள், கால்குலேட்டர்ஸ்கள், கம்ப்யூட்டர்கள் என்று ரேஷன் கடை லிஸ்ட் போல ரொம்ப நீளமானது இவர்கள் தயாரிக்கும் பொருட்களின் லிஸ்ட். உ. பி., ராஜஸ்தான் மாநிலங்களில் சில இடங்களிலும் தொழிற்சாலைகள் கொண்டது டி. ஸி. எம். உலகப் புகழ் பெற்ற டொயோட்டா (ஜப்பான்) நிறுவனத்துடன் இணைந்து டொயோட்டா—டி. ஸி. எம். கார் தயாரிப்பிலும் ஈடுபட்டுள்ளது. இந்நிறுவனத்தின் மொத்த விற்பனை ஆண்டுக்குச் சுமார் 400 கோடி ரூபாய். இதன் சேர்மன் மற்றும் எம். டி. ஆக இருப்பவர் பரத்ராம். இவர் சகோதரர் சரத்ராம் மற்றும் ஒரு எம். டி.



✕ ஸ்வராஜ்பால்



✕ பரத்ராம்

**எஸ்கார்ட்ஸ் — சில வார்த்தைகள்:** எஸ்கார்ட்ஸின் டிராக்டர் பிரசித்தி பெற்றது. 1944—இல் டிராக்டர் தயாரிப்புக்காக நிறுவப்பட்ட எஸ்கார்ட்ஸ் இன்று டிராக்டர் தவிர ராஜ்தூத் மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர், மோட்டார்கார்களுக்கான உதிரி பாகங்கள், எக்ஸ்ரே உபகரணங்கள் மற்றும் விவசாயக் கருவிகள் என்று பல பொருள்களை உற்பத்தி செய்யும் புகழ் பெற்ற கம்பெனியாய் இருக்கிறது. மே. ஜெர்மனி, அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடுகளின் சில கம்பெனிகளுடன் தொழில் கூட்டுறவு கொண்டுள்ளது. தலைமை அலுவலகம் டெல்லியில் ஃபரிதாபாதில். முக்கியமான தொழிலகங்கள் பாடியாலா அருகில் பஞ

தூர்களிலும் பெங்களூரிலும் உள்ளன. இந்நிறுவனத்தின் 14.18 கோடி ரூபாய்க்கான ஷேர்கள் 16,000 பங்குதாரர்கள் கையில் உள்ளன. ஆண்டுக்கு மொத்த விற்பனை ரூ. 200 கோடியைத் தாண்டுகிறது. எச். பி. நந்தா இதன் எம். டி. அவரது மகன் ராஜன் நந்தா ஜாயின்ட் எம். டி. பரத்ராம் இதன் டைரக்டரில் ஒருவர். இவர், டி. ஸி. எம்மின் எம். டி. என்பதை இவ்வளவு சீக்கிரம் மறந்திருக்க மாட்டீர்கள். இங்கே ஒன்று குறிப்பிட வேண்டும். நிக்கி டாஷா காஸ் அடுப்புகள் தயாரிக்கும் கம்பெனி நந்தா வீட்டுப் பெண்களினுடையது.

**எல். ஐ. ஸி. — சிலவார்த்தைகள்:** எல். ஐ. ஸி. இன்ஷுரன்ஸ் கம்பெனி என்பது எல்லோருக்கும் தெரியும். நம்மிடமிருந்து வாங்கும் ப்ரீமியம் தொகையை நல்ல விதமாய் முதலீடு செய்யச் சிறந்த கம்பெனிகளின் ஷேர்களை வாங்குகிறது எல். ஐ. ஸி. எஸ்கார்ட்ஸிலும் சரி, டி. ஸி. எம்மிலும் சரி எல். ஐ. ஸிக்கு ஷேர்கள் உண்டு. அனைத்திந்திய நிதியுதவி நிறுவனங்களான ஐ.டி.பி.ஐ. (இண்டஸ்டிரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆஃப் இந்தியா) ஐ. ஸி. ஐ. ஸி. ஐ (இண்டஸ்ட்ரியல் கிரெடிட் அண்ட் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா) இடமும் கணிசமான டி. ஸி. எம். மற்றும் எஸ்கார்ட்ஸ் ஷேர்கள் உள்ளன.



✖ நந்தா

**கம்பெனிச் சட்டங்கள் — முக்கியமாய்ச் சில:** மொத்தத்தில் 26 சதம் ஷேர்கள் ஒருவரிடம் இருந்தால் அவருக்குச் சிறப்பு அதிகாரம் உண்டு. ஏனென்றால் ஜெனரல் பாடி மீட்டிங்கில் சில முக்கியமான தீர்மானங்களைக் கொண்டு வர சாதகமான ஓட்டுக்கள், எதிர்ப்பு ஓட்டுக்களைக் காட்டிலும் மும்மடங்காய் இருத்தல் வேண்டும்.

அதேபோல் 51 சதம் ஷேர் வைத்திருப்பவர் பெரும்பான்மை பலம் கொண்டவர். சாதாரணப் பெரும்பான்மையே தேவைப்படும் விஷயங்களை அவரது ஓட்டு தீர்மானிக்கிறது.

இதைத் தவிர மற்றொரு முக்கியமான சட்டம் — இந்தியாவில் வசிக்காத எந்த ஒரு இந்தியரும் (Non – Residen Indian) ஏற்கெனவே நிறுவப்பட்ட எந்த ஒரு கம்பெனியிலும் அதிகபட்சம் ஐந்து சதவிகிதம் ஷேர்களைத்தான் வாங்க முடியும். இச்சட்டம் சென்ற வருடம் மே மாதத்தில் இயற்றப்பட்டது.

இவ்வாறு வாங்கப்படும் ஷேர்களை வாங்கியவர் பெயருக்கு மாற்றித் தரும் அதிகாரம் கம்பெனி போர்டின் கையில் தான் இருக்கிறது. காரணம் கூறாமல் ஷேர் மாற்றத்தை அனுமதிக்க மறுக்கும் அதிகாரம் போர்டுக்கு உண்டு. இதனால் பாதிக்கப்பட்ட நபர் கம்பெனிச் சட்ட போர்டுக்கோ, அல்லது ஹைகோர்ட்டுக்கோ அப்பீல் செய்யலாம்.

**எஸ்கார்ட்ஸ் விவகாரம்:** இந்திய கம்பெனிகளில் தம் சொத்தை முதலீடு செய்யத் தீர்மானித்த ஸ்வராஜ்பால் பல்வேறு கம்பெனிகளின் ஷேர்களையும் வாங்கத் தொடங்கினார்.

எஸ்கார்ட்ஸ் விஷயத்தில் தற்போதைய அதன் நிர்வாகத்தினரான நந்தாக்களிடம் சுமார் 7 அல்லது 8 சதவீதம் ஷேர்களே உள்ளன. இருந்தாலும் இவர்கள் கம்பெனியைத் தங்கள் கைக்குள் வைத்திருந்தனர்; இருக்கின்றனர். இதை அறிந்த ஸ்வராஜ் பால் நந்தாக்களைக் காட்டிலும் அதிக ஷேர்களை வாங்கி கம்பெனியைத் தம் கைக்குள் போட்டுக் கொள்ள விரும்பினார். அதன்படி டெல்லியின் ஷேர் புரோக்கர்கள் மூலம் (இவர்களுள் முக்கியமானவர் பாரத் பூஷன்) எஸ்கார்ட்ஸ் ஷேர்களை வாங்க ஆரம்பித்தார். தனிப்பட்ட நபர்களிடமிருந்து 5 முதல் 6 சதம் வரை ஷேர்களை வாங்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

தாம் வாங்கிய ஷேர்களைத் தம் பெயருக்கு மாற்றித் தருமாறு ஸ்வராஜ் பால் கேட்டபோது எஸ்கார்ட்ஸ், டி. ஸி. எம். இரு நிறுவனங்களுமே அவ்வாறு செய்ய மறுத்து விட்டன. டி. ஸி. எம். நிர்வாகம் இவ்விஷயத்தைப் பெரிதுபடுத்தவில்லை. ஆனால் எஸ்கார்ட்ஸில் நந்தா செய்தித்

தாள்களுக்கும் பங்குதாரர்களுக்கும் ஸ்வராஜ்பால் எஸ்கார்ட்ஸை தம் கைக்குள் போட்டுக் கொள்ள முயற்சிசெய்கிறார் என்று சுற்றறிக்கை விட்டார். ஸ்வராஜ்பாலும் நந்தாவையும் பிற தொழிலதிபர்களையும் எதிர்த்துச் செய்தித் தாள்களில் பேட்டி கொடுத்தார்.

எஸ்கார்ட்ஸ் ஷேர்களை மாற்ற மறுத்த போது ஸ்வராஜ்பால் கம்பெனி லா போர்டுக்கோ டெல்லி ஹைகோர்ட்டுக்கோ அப்பீல் செய்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் பால் தம் பெரிய மனிதத் தனத்தைக் காட்டினார். கம்பெனி போர்டு ஒப்புக் கொண்டால் ஷேர்களை மாற்றிவிட லாம். போர்டை இதற்கு ஒப்புதல் அளிக்கச் செய்வதற்கு ஒரு வழியுண்டு — கம்பெனி போர்டில் சாதகமாக இருக்கக் கூடியவர்களை உறுப்பினர்களாக ஆக்குவதுதான் அந்த வழி. எல். ஐ. சி. எஸ்கார்ட்ஸ் போர்டையே மாற்றி அமைக்க முடிவெடுத்தது. இதனால் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒன்பது டைரக்டர்களை நீக்கிவிட்டுப் புதிய நபர்களை நியமிக்க முற்பட்டுள்ளதுஎல்.ஐ.சி. இந்த ஒன்பதின்மரும் எல். ஐ. சி. மற்றும் நிதி நிறுவனங்களின் ஒப்புதலுடன் நியமிக்கப்பட்டவர்களே. அவர்களுள் பலர் பொறுப்பான பதவிகளிலிருந்து ஓய்வு பெற்றவர்கள். முன்னாள் ஃபீல்டு மார்ஷல்

---

## ஸ்வராஜ்பால் பார்வையில் இந்திராகாந்தி

இந்திரா அம்மையாரிடம் தாம் எந்தவித சலுகையும் பெற்றதில்லை என்று அடித்துச் சொல்கிறார் ஸ்வராஜ் பால். இருப்பினும், அம்மையார் ஒவ்வொரு முறை அயல்நாடு செல்லும்போழுதும் பால் அவருடன் காணப்படுகிறார் என்பதை மறுப்பதற்கில்லை.

எஸ். என். மிஸ்ராவும், ஆர். கே. தவானும் பாலை திருமதி காந்திக்கு அறிமுகம் செய்து வைத்தனர். எமர்ஜன்ஸி சமயத்தில் இவர்களிடையே நெருக்கம் அதிகரித்தது. திருமதிகாந்தி லண்டன் வந்த பொழுது அவரது விசிறி ஆனார் பால். இந்தச் சகவாசம் தொடங்கி ஒன்பது ஆண்டுகளே



ஆகின்றன. இந்த ஒன்பது ஆண்டுகளில் தாம் தெரிந்து கொண்டவற்றைப் புத்தகமாக எழுதியுள்ளார் பால் — 'இந்திரா காந்தி' என்ற தலைப்புடைய இப்புத்தகம் சமீபத்தில் லண்டனில் வெளியிடப்பட்டது. அதிலிருந்து சில பகுதிகள்:

- திருமதி இந்திராகாந்திக்கு என் சொந்த காணிக்கை இப்புத்தகம்.
- பிறந்த நாட்டின் மீது நான் கொண்டுள்ள பற்றின்அடையாளமாய், அந்நாட்டின் எதிர்காலம் பற்றிய என் நம்பிக்கைகளின் மொத்த உருவாய், இந்தியர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கும் இடையே நிலவும் நீடித்த நல்லுறவின் உறுதியான சின்னமாய்த் திகழ்கிறார் இந்திராகாந்தி.
- கறுப்புப் பணம் பற்றி... எதிர்க் கட்சிகள் இந்த விஷயத்தை (டி. வி. எம்., எஸ்கார்ட்ஸ்) இதுதான் சாக்கு என்று பிடித்துக் கொண்டு விட்டனர். சிலர் நான் காங்கிரஸ் கட்சியின் அடியாள் என்றும், அக்கட்சியில் முக்கிய உறுப்பினர்களின் கறுப்புப் பணத்தைச் சலவை செய்து இந்தியாவுக்குத் திருப்பி எடுத்து வருவதே என் நோக்கம் என்றும் கூட அநியாயமாய்க் கூறுகிறார்கள். இதெல்லாம் என்றுமே உண்மையாக இருந்ததில்லை, இருக்கப் போவதும் இல்லை — நான் யாருடைய ஏஜெண்டும் இல்லை. என் குடும்பம் என் கம்பெனி தவிர நான் யாருடைய பிரதிநிதியும் இல்லை.
- திருமதி காந்தி அரசியல் வாழ்வில் உண்மையின் மொத்த உருவாய்த் திகழ்கிறார்.

ஜெத்மலானியிடம் ரொம்பக்கோபமாய் இருக்கிறார் பால்.

- லண்டனில் ஜெத்மலானி என்னை 'விசாரித்தார்.' இவர் இந்திராகாந்தியைக் கைது செய்ய வேண்டும் என்று முடிவாகச் சொன்னவர். நான்திருமதி காந்தியின் அயல்நாட்டு வங்கி கணக்கர் என்று கூறுகிறார். இரண்டு சி.பி.ஐ. நபர்களுடன் லண்டனுக்கு வந்தார் ஜெத்மலானி. ஒரு துளியும் ஆதாரம் கிடைக்காமல் அவர் திரும்ப வேண்டியதாயிற்று. ஸ்காட்லாண்டு யார்ட் ஒத்துழைக்க மறுத்து விட்டது.
- பொது வாழ்வில் திருமதி காந்திக்குப் பதவி வேட்கை உடைய அரசியல்வாதியென்று பெயரும், பிராபல்யமும் ஏற்பட்டுள்ளது. தனி வாழ்வில் அவருடன் பழகிய நான் அவர் உண்மையில் எவ்வளவு அன்பானவர், குடும்பத்தோடு ஒட்டுதலாய் இருப்பவர், நகைச்சுவை உணர்வு உள்ளவர் என்று அறிவேன்.

நன்றி: **இந்தியன் எக்ஸ்பிரஸ்**

ஊட்டம்
அளியுங்கள் உங்கள்
தோற்ற நிறத்திற்கு,
மின்னிடும் உங்கள் மேனி

# ரெயின்ட்ராப்

ஊட்டமளிக்கும் சோப்




ஆயில் ஆஃப் ஜெஸ்மின்




ஆயில் ஆஃப் ஆல்மண்ட்

டாடா தயாரிப்பு

Creative Unit-5976 Tam.

மாறி வரும் காலத்தின் பெருகி வரும் தேவைகளை சமாளிக்க —

# விவசாயிகளின் பரவலான பணிகளுக்கு டா:பே அளிக்கும் புதிய சக்தி வாய்ந்த டிராக்டர் எம்.எ:ப். 1040

வேளாண்மைத் தொழிலை இயந்திர மயமாக்கும் பணியில் முன்னோடியாக இருந்த MF 1035 இருபதாண்டுகளுக்கும் மேலாக இந்திய விவசாயத் திற்கு துணை புரிந்துவந்துள்ளது.

இப்பொழுது டா:பே அறிமுகப்படுத்தும் ஒரு புதிய மாடல்—அதிகப்படியான 7 குதிரைச் சக்தியுடன் கூடிய MF 1040. இது அதிகப்படியான இழுக்கும் சக்தியுடன் பெரிய கனமான கருவிகளை இயக்குவதற்கு ஏற்ப வடிவமைக்கப்பட்டுள்ளது.

MF 1040—மிகப்பெரிய 11" கிளட்ச், டிலக்ஸ் ஸீட், :பிளாட் டாப் :பெண்டர்கள், டிராக்டர் மீட்டர், சிறப்பான விளக்குகள், பாதுகாப்புக்காக :ப்யூஸ் காரியர், மற்றும் இதர கருவிகள் போன்ற சிறப்பான அம்சங்களுடன் உங்களுக்குத் தேவையான விவசாயப் பணிகளில் அமோக உற்பத்தியுடன் அதிக லாபம் பெறும் வகையில் பெரிதும் துணை புரிகிறது.

அருகிலுள்ள டா:பே டீலரிடம் உங்களது வருகை இதனை மேலும் உறுதிப்படுத்தும்.

MAC T-51 A/T






TAFE

டிராக்டர்ஸ் அண்டு :பார்ம் எக்விப்மென்ட் லிமிடெட்
சென்னை

• பெரிய கருவிகள் பயன்படுத்தலாம் • அதிக நிலம் பண்படுத்தலாம் • அமோக விளைச்சல் பெறலாம்

மானெக்ஷா, முன்னாள் நிதித்துறை செயலர் எஸ். பூதலிங்கம், கே. பி. லால் – முன்னாள் காமர்ஸ் செயலர், எஸ். ரங்கநாதன் – முன்னாள் ஆடிட்டர் ஜெனரல் போன்றோர்.

எல். ஐ. சி. எஸ்கார்ட்ஸின் விசேஷ ஜெனரல் பாடி மீட்டிங்கை ஏற்பாடு செய்ததும் நந்தா பம்பாய் ஹைகோர்ட்டில் 'ரிட்' போட்டார். மீட்டிங் நிறுத்தப்பட்டது. எல். ஐ. சி. சுப்ரீம் கோர்ட்டுக்கு மனு செய்து மீட்டிங்கை நடத்த அனுமதி பெற்றது. ஆனால் சுப்ரீம் கோர்ட், ஜெனரல் பாடி மீட்டிங்கில் நடக்கும் வோட்டெடுப்பு முடிவுகளைத் தன்னுடைய அனுமதி பெற்ற பிறகு தான் அறிவிக்க வேண்டும் என்று உத்தரவு இட்டது. இந்த ஜெனரல் பாடி மீட்டிங்குக்கு எச்.பி. நந்தா தலைமை வகிக்கவில்லை. ஜென் என்ற ஒரு சர்வதேச வக்கீல் தலைமை ஏற்றார். இத்தலைமையை ஏற்கும் உரிமை பெற அவர் எஸ்கார்ட்ஸில் ஒரே ஒரு ஷேர் வாங்கினார். ஏழு, எட்டு, நாட்களுக்கு மீட்டிங் நடந்தது. ஒவ்வொரு கட்டத்திலும் மைனாரிடி பங்குதாரர்கள் தீவிர எதிர்ப்பு தெரிவிக்க டென்ஷன் நிறைந்த சூழலில் மீட்டிங் நடைபெற்றது. இந்த மீட்டிங்கில் கொண்டு வரப்பட்ட தீர்மானங்கள், ஓட்டெடுப்புக்களின் முடிவுகள் - இவை இன்னும் சில நாட்களில் தெரியும்.

**எஸ்கார்ட்ஸின் எதிர்காலம்:** பெரும்பான்மையான ஷேர்கள் வைத்திருக்கும் எல்.ஐ.சி–ஸ்வராஜ் பால் இவர்கள் விருப்பப்படியே நிர்வாக சார்புள்ள ஒன்பது டைரக்டர்களும் நீக்கப்படுவார்கள் என்று நிச்சயமாய் சொல்லி விடலாம். பிறகு நிர்வாகத்தில் நந்தாக்கள் தவிர மற்ற அனைவரும் எல். ஐ. ஸி.யும் அனைத்திந்திய நிதி உதவி நிறுவனங்களும்கூறுகிறபடி நடப்பவர்களாக இருப்பார்கள்.

சுமார் ரூ.38–க்கு விற்றுக் கொண்டிருந்த டி. ஸி. எம். ஷேர்கள் ஸ்வராஜ் பால் வாங்கத் தொடங்கியதும் சுமார் ரூ. 75 வரை உயர்ந்து விட்டன. தற்போதைய விலை – ரூ. 54.

**ஒரு கிசு கிசு:** எப்படியும் நிலைமை தமக்கு சாதகமாயில்லை என்பதால் டி. ஸி. எம்., எஸ்கார்ட்ஸ் நிர்வாகத்தினர் ஸ்வராஜ் பாலுடன் ஓர் உடன்பாட்டுக்கு வரலாம் என்ற பேச்சு அடிபடுகிறது. உண்மை என்னவோ ஸ்வராஜ் பாலுக்குத்தான் வெளிச்சம்!

**டி. ஸி. எம் விஷயம்:** இதுவும் ஏறத்தாழ எஸ்கார்ட்ஸ் விவகாரம் போன்றதே. இதிலும் எல். ஐ. ஸிக்கும் அனைத்திந்திய நிதி உதவி நிறுவனங்களுக்கும் தான் 50 சதத்துக்கு அதிகமான பங்குகள். தனியார்களிடமிருந்து ஸ்வராஜ்பால் வாங்கிய ஏழு சதம் பங்குகளை அவர் பெயருக்கு மாற்ற கம்பெனி மறுத்து விட்டது.

**டி. ஸி. எம். எஸ்கார்ட்ஸ் வித்தியாசங்கள்:** இரு கம்பெனிகளிலும் பிரச்னை ஒன்றுதான். என்றாலும் இந்த விஷயத்தில் எஸ்கார்ட்ஸ் கொஞ்சம் ஆத்திரமாய் அவசரப்பட்டுச் செயல்பட்டது என்று கூறப்படுகிறது. டி. ஸி. எம். நிர்வாகம், கோர்ட், அது, இது என்று போகாமல் பிரச்சினையைக் கொஞ்சம் நிதானமாகவே அணுகுகிறது.

**ஏன்? ஏன்? ஏன்?** இந்த இரண்டு நிறுவனங்களையும் தம் கைக்குள் கொண்டு வர ஸ்வராஜ் பால் ஏன் முயற்சி செய்கிறார்?

சமீபத்தில் ஒரு புதிய செய்தி வெளிவந்துள்ளது – காபாரோ க்ரூப் கம்பெனிகளின் ஷேர்கள் எல்லாம் ஒரு ஸ்விஸ் பாங்கிடம் உள்ளன – என்பதே அச்செய்தி.

எந்த வியாபாரத்திலும் 'ஸ்விஸ்பாங்க்' என்ற பெயர் அடிபட்டாலே மர்மம் சூழ்ந்து கொள்கிறது. ஏன்? – காலம் காலமாக ஸ்விட்சர்லாந்து எந்தப் பக்கமும் சாயாத நடுநிலை நாடாக விளங்கிவருகிறது. இரண்டு உலக யுத்தங்களில் அது கலந்து கொள்ளவில்லை. ஸ்விஸ் சட்டங்கள் அந்நாட்டு வங்கிகளுக்கு டெபாஸிட்தாரர்களின் கணக்கு விஷயங்களைப் பரம ரகசியமாய் வைத்திருக்கும் உரிமையை அளிக்கின்றன. டெபாஸிட்தாரர்களின் பெயர் கூடத் தெரிய வராது. குறிப்பிட்ட எண்ணில் தான் அக்கவுண்ட் இருக்கும். எந்த அதிகாரியும் எந்தக் கேள்வியும் கேட்க முடியாது. பொதுவாக உலகெங்கும் முறையற்ற வழிகளில் பணம் சம்பாதிப்பவர்கள் ஸ்விஸ் பாங்கிடம் சரண்புகுந்து மெல்ல மெல்ல கறுப்புப் பணத்தை வெள்ளைப் பணமாகச் சலவை செய்கிறார்கள்.

பிரிட்டிஷ் குடிமகனான ஸ்வராஜ் பால் இந்திய தொழில் துறையைச் சீர்ப்படுத்தவே தாம் முயல்வதாகக் கூறுகிறார். அதாவது சிறுபான்மை பங்குகளை வைத்துக் கொண்டே நிர்வாகிகள் தங்கள் குடும்பம் மற்றும் நண்பர்களுக்குச் சாதகமாய் கம்பெனியை நடத்திச் செல்லும் அதர்மப் போக்கை மாற்றி அமைக்கத் தாம் முயல்வதாகக் கூறுகிறார். ரொம்ப நல்ல எண்ணம் தான். ஆனால் ஸ்வராஜ் பால் கரங்களில் நிர்வாகம் போய்ச் சேர்ந்தால் அவரே இது போன்ற முயற்சியில் ஈடுபட மாட்டார் என்பது என்ன நிச்சயம்? எல். ஐ. சியும் நிதி நிறுவனங்களும் பல முக்கியஸ்தர்களின் முகத்தில் கரி பூசி விட்டு ஸ்வராஜ் பாலுக்குச் சாதகமாய் எஸ்கார்ட்ஸ் போர்டை மாற்றி அமைக்க முற்படுவது ஏன்? ஒரு பிரிட்டிஷ் குடிமகனுக்கு –(அவர் பத்மபூஷணாகவே இருக்கட்டும்) ஏன் எல்.ஐ. சியும் நிதி நிறுவனங்களும் விழுந்து விழுந்து ஆதரவு அளிக்க வேண்டும்? இதற்கெல்லாம் விடை ஒரு சிலருக்கே தெரியும். அந்தச் சிலர் வாயைத் திறக்கவே மாட்டார்கள். ஆனால் உண்மை என்றேனும் ஒருநாள் வெளிப்பட்டே தீரும். சந்தேகமே இல்லை. பொறுத்திருந்து பார்ப்போம்.

தகவல் தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

**சீதாரவி**

மொதல்லே வெளியே போக வழி விடுங்கய்யா!
உதவி ஜனாதிபதி


தேர்தல் கமிஷன்
இ.காங்கிரஸ்


..போதாதுங்க!..'பெயர்கள் சூட்டப்பட மாவட்டங்கள் தேவை'ன்னு விளம்பரம் கொடுத்துடுங்க!
காயிதே மில்லத் மாவட்டம்
பெரியார் மாவட்டம்
காமராஜ் மாவட்டம்
தில்லையாடி வள்ளியம்மை மாவட்டம்
ராஜாஜி மாவட்டம்




# கல்கி

1984 ஜூலை 29
மலர் : 42 இதழ் : 52
ரக்தாக்ஷி ஆடி 14




## அன்பினால் ஆளுங்கள்!

அன்பினால் மக்களை ஆளுவதற்குப் பதில் அதிகார பலத்தினால் ஆளப் பிரதமர் நினைப்பது பரிதாபம்.

கிணறுவெட்ட பூதம் புறப்பட்ட கதையாக இந்திராவினால் உருவாக்கப்பட்டு வளர்ந்த பிந்தரன்வாலே இந்திரா காந்திக்கே தலைவலி தந்தார். அமிர்தசரஸ் பொற்கோயில் பயங்கரவாதிகளின் கோட்டையாகவும் ஆயுதக் கிடங்காகவும் விளங்கியது. இந்நிலையை மாற்றிப் பொற்கோயிலைப் புனிதமாக்கும் பணியில் ராணுவத்தினரை ஈடுபடுத்த வேண்டிய நிர்ப்பந்தம் பிரதமருக்கு ஏற்பட்டது. இது வரை சரி. பஞ்சாப் முழுவதிலும் ஆங்காங்கே பதுங்கியிருந்த பயங்கரவாதிகளைச் சுற்றி வளைக்க ராணுவம் ஏவப்பட்டதற்கும் ஒப்புதல் தரலாம்.

ஆனால் இதன்பின் நடந்தவையும் நடந்து வருவனவும் கவலையும், துயரமும் அளிப்பவை. ராணுவம் தன் பணியை மிகத் துரிதமாகச் செய்து முடித்துவிட்டுப் பொற்கோயிலையும் பஞ்சாபையும் விட்டு வெளியேறியிருக்க வேண்டும். ஜனநாயக அமைப்புக்கள் செயல்பட அனுமதித்திருக்க வேண்டும். பொற்கோயில் அதன் சீக்கிய நிர்வாகத்தினரிடமே ஒப்புவிக்கப்பட்டிருக்க வேண்டும். சீக்கிய மக்களிடம் யாருக்கும் விரோதமில்லை என்பதை உணர்த்த அவர்களின் நியாயமான கோரிக்கைகள் ஒன்றிரண்டை உடனடியாக நிறைவேற்றித் தந்து நல்லெண்ணத்தை வளர்த்துக் கொண்டிருக்க வேண்டும். மீண்டும் பேச்சு வார்த்தைகளைத் துவக்கியும் இருக்க வேண்டும்.

ஆனால் இதற்கு நேர்மாறாகக் காரியங்கள் நடக்கின்றன. பொற்கோயிலும் பஞ்சாபும் இன்னமும் ராணுவத்தின் வசமே இருக்கிறது என்பது மட்டுமல்ல, புதியதொரு சர்வாதிகார அவசரச் சட்டமும் பிறப்பிக்கப்பட்டுள்ளது. இதன்படி இந்தியாவின் எந்தப் பகுதியையும் 'பயங்கரவாதிகளால் பாதிக்கப்பட்ட பகுதி' என்று அறிவித்து விடலாம். அங்கே யாரை வேணுமானாலும் அரசு கைது செய்து ரகசிய விசாரணை நடத்தித் தண்டித்து விடலாம். யார் மீது என்ன குற்றம் சுமத்தப்பட்டது, சாட்சி சொன்னது யார், என்ன தண்டனையை யார் விதித்தார்கள் போன்ற எந்த விவரமும் வெளியே தெரிய வராது. பாதிக்கப் பட்ட ஒருவர் சுப்ரீம் கோர்ட்டுக்குத்தான் போக முடியும். அந்த முயற்சியை அவர் மேற்கொள்ளுமுன்னரே அவர் கதை முடிந்து விட்டாலும் வியப்பில்லை!

இப்படிப்பட்ட சட்டம் பயங்கரவாதிகளைவிடப் பயங்கரமானவர்களாக ஆட்சியிலிருப்போரை நமக்குச் சித்திரித்துக் காட்டுகிறது. பஞ்சாபில் கைதாகியுள்ள ஏராளமானவர்கள் மீது சம்பிரதாய முறையில் வழக்குத் தொடுத்து நீதிமன்ற விசாரணை நடத்துவதென்பது சிரமமான காரியமாக இருக்கலாம். ஆனால் ராணுவத்தை அனுப்பியபோதே ஆட்சியில் இருப்போர் இத்தகைய பின்விளைவுகளை எதிர்பார்த்து, சவால்களை ஜனநாயக ரீதியில் சந்திக்கவும் தயாராக இருந்திருக்க வேண்டுமல்லவா?

போதாக்குறைக்கு சீக்கிய மதத்திலுள்ள உட்பிரிவுகளைப் பயன்படுத்தி ஒரு சாராருக்கு எதிராக இன்னொரு பிரிவினரைக் கிளப்பி விட்டு வேடிக்கை பார்க்கிறார் பிரதமர். பொற்கோயிலைப் பழுதுபார்க்கும் பணியில் பிரிட்டிஷார் கற்றுத் தந்த பிரித்தாளும் சூழ்ச்சி ஆரம்பமாகியுள்ளது.

பஞ்சாபியரைப் புதுதில்லி விரோதிகளாகக் கருதுவது போல் தோன்றுகிறது. இந்தியர்களாகிய அவர்களை எதிரிகளாக்கினால் இழப்பு இந்தியாவுக்கே.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

''சங்கரன் வாசிக்கிறாரா? சக்கைப் போடுதான்'' என்று சொல்லிக் கொண்டே ஆர்வத்துடன் கச்சேரிக்குக் கிளம்பும் ரசிகர்கள் ஏராளம். ஆனால் அவரை அதிகமாக நாம் ரசிக்க முடியாதபடி கனடா தேசம் அவரை வளைத்துப் போட்டுக் கொண்டது.

**மிருதங்கக் கலைஞர் திருச்சி சங்கரனுக்கு 'சங்கீத சூடாமணி' விருது கொடுத்துக் கௌரவிக்கிறார்கள் கிருஷ்ண கானசபையினர். கனடாவிலிருந்து சென்னை வந்திருந்த சங்கரன், சில சுவையான சம்பவங்கள் சொன்னார்:**

''ஒருமுறை ஜான் ஹிகின்ஸ் அவர்களின் கச்சேரி, டொரான்டோவிலிருந்து வடக்கே இருநூறு மைல் தூரத்திலிருக்கும் சட்பரி என்னுமிடத்தில் இந்தியா அசோஸியேஷனில் ஏற்பாடாகியிருந்தது. ஒரே ஒரு மிருதங்கம் தான் எடுத்துக் கொண்டு போயிருந்தேன். எங்களுடன் ஃப்ளைட்டில்



# சக்கைப் போடு, சங்கரா!

அந்த மிருதங்கம் வந்து சேரவில்லை. ஏழு மணிக்குக் கச்சேரி. ஏர்லைன்ஸில் கேட்டால், 'மாறிப் போய் மாண்ட்ரியாலுக்குப் போய் விட்டது; நீங்கள் உங்கள் வீட்டிலிருந்து இன்னொரு மிருதங்கம் கொடுத்தனுப்பினால், அடுத்த விமானத்திலேயே கொண்டு வந்து கொடுத்து விடுகிறோம்' என்றார்கள். கனடாவிலுள்ள என் சிஷ்யனுக்குப் போன் செய்து, வீட்டிலிருந்து இன்னொருமிருதங்கம் கொடுத்தனுப்பச் சொன்னேன். ஏழே காலுக்குக் கச்சேரி ஆரம்பிப்பது என்று நிர்மானித்தார்கள். கச்சேரி துவங்க ஐந்து நிமிஷம் இருக்கும்போது, ஏர்-கனடாக்காரர்களே மேடையில் ஏறி என்னுடைய மிருதங்கத்தைக் கொண்டு வந்து கொடுத்தார்கள்!''

அங்கேயே இருக்கும் டி. விசுவநாதன், ஹிக்கின்ஸ் ஆகியவர்களுக்கு வாசிப்பது தவிர, இங்கிருந்து அங்கே வருகிற பல கலைஞர்களுக்குப் பக்கவாத்தியம் வாசித்திருக்கிறார் சங்கரன்.

''கனடாவுக்குப்போன புதிது. நியூயார்க்கில் லால்குடி ஜெயராமன், என். ரமணி ஜுகல்பந்தி முடித்துவிட்டு, டொரன்டோவுக்குத் திரும்பினேன். கஸ்டம்ஸில் மிருதங்கத்தைத் திறந்து காண்பி என்றார் ஒருவர். உறையை மட்டும் கழற்றிக் காண்பித்தேன். 'என்ன இத்தனை கனமாயிருக்கிறதே. உள்ளே என்ன வைத்திருக்கிறீர்கள்' என்றார். 'வெறும் காற்றுத்தான். மரத்தாலானது. அதுதான் கனமாயிருக்கிறது' என்றேன். திருப்தியாகவில்லை அவருக்கு. 'வாசி' என்றார்; வாசித்துக் காண்பித்தேன். 'என்ன, உலோகச் சத்தம் மாதிரி வருகிறதே' என்று சொன்னவர், மிருதங்கத்தைத் திறந்து, பிரித்துக் காண்பிக்கச் சொன்னார். 'நீங்கள் அப்படியே திருப்பிப் போட்டுக் கொடுத்து விடுவதாயிருந்தால் திறந்து காண்பிக்க ஆட்சேபனை இல்லை' என்றேன். இன்னொரு அதிகாரியைக் கலந்து ஆலோசித்து விட்டு, 'சரி, போங்கள்' என்று விட்டுவிட்டார். அதுபோல, என்னுடைய சிறு விபூதிப் பையைத் திறந்து பார்த்து விட்டு, 'இது என்ன வெள்ளைப் பொடி?' என்று கேட்டார்கள். சைவ சமய வரலாறு, விபூதியின் மகிமை எல்லாம் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா? அதனால், அப்போதைக்கு, 'இந்தப் பொடியைக் கையில் போட்டுக் கொண்டுதான் வாசிப்பேன்' என்றேன். 'குங்குமம்?' 'அதையும் அதேமாதிரிதான் உபயோகிக்கிறேன்' என்று ஒரு போடு போட்டேன்!''

**1955**-ல் திருச்சியில் நன்றுடையான் கோயிலில் ஆலத்தூர் சகோதரர்களுக்கு இவர் வாசித்த போது இவருக்கு வயது



⌘ டாக்டர் எஸ். ராமநாதன்

**''தலைசிறந்தவர்''**

''திருச்சி சங்கரன் நிறைய கச்சேரிகளுக்கு வாசித்திருக்கிறார். இவர் வாசிப்பில் ஒரு விசேஷம் என்னவென்றால் நாதமும் இருக்கும்; கணக்கு விவகாரங்களும் இருக்கும். கீர்த்தனங்களுக்கு வாசிக்கும்போதெல்லாம் மிக நன்றாக அநுசரித்து வாசிப்பார். எனக்கே அநேக கச்சேரிகளுக்கு அவர் வாசித்திருப்பதால்தான் அநுபவபூர்வமாகச் சொல்லுகிறேன். டொரன்டோவில் தியாகராஜ உற்சவத்தின் போதும் நான் வெஸ்லின் பல்கலைக்கழகத்தில் இருந்த போதும் எனக்கு வாசித்திருக்கிறார் சங்கரன்.

ரொம்ப கற்பூர புத்தி. அசாத்தியமான அறிவு. இவர் வாசிப்பில் நாத சௌக்கியம் உண்டு. அதோடு இன்டலெக்சுவல் அப்ரோச் என்கிற அறிவுபூர்வமான அணுகுமுறையும் உண்டு. வாசிப்பில் விவகாரம் பண்ணினால் அதையும் ரசிக்கும்படி அழகாய்ச் செய்வார். பழனி சுப்பிரமணியபிள்ளை அவர்களின் சிஷ்ய பரம்பரைக்கு மிக உன்னதமான பிரதிநிதி.

மேல்நாட்டிலும் இவர் நிறைய சீடர்களைத் தயார் செய்திருக்கிறார். இங்கே நம் நாட்டில் இவர் இல்லாதது நமக்கு ஒரு குறைதான். ஆனாலும் வருடா வருடம் டிசம்பர் சீஸனில் இங்கே வந்து வாசிக்கிறார் என்பதுதான் ஓர் ஆறுதல்.

பழனி சுப்பிரமணியபிள்ளை அவர்களுக்குப் பல சீடர்கள். அதில் இவர் தலைசிறந்தவர்.''

—பேராசிரியர் டாக்டர் எஸ். ராமநாதன்.

பதிமூன்று. அன்றுதான் இவருக்கு அரங்கேற்றம். கூடவே குருநாதர் பழனி சுப்பிரமணியபிள்ளை அவர்களும் வாசித்தாராம். பலதடவைகள், கச்சேரி இருக்கிற அன்றைக்கு மாலை ஐந்து மணிக்குத் திடீரென்று சங்கரனைக் கூப்பிட்டு, 'இன்னிக்கு நீயும் வாசியேன் ஐயா' என்பாராம். பயம், சந்தோஷம் இரண்டும் கவ்விக் கொள்ள, அவசர அவசரமாக மிருதங்கத்தைத் தயார் செய்ய ஓடுவாராம் சங்கரன். பழனி சுப்பிரமணிய பிள்ளை அவர்களிடம் சேருமுன், பூவாளூர் வெங்கட்ராமன் அவர்களிடம் கற்றுக் கொண்டார் சங்கரன்.

**1971**-ல் கனடாவுக்கு விசிட்டிங் புரொபசராகப் போனவரை, அங்கேயே தங்க வைத்துவிட்டது அந்த நாடு. சென்னைப் பல்கலைக்கழக எம். ஏ. பட்டதாரியானஇவர், டொரன்டோவிலுள்ள யார்க் பல்கலைக்கழகத்தில் இசைப் பேராசிரியராகவும், இந்திய இசைப் பயிற்சியின் இயக்குநராகவும் தற்போது பணியாற்றி வருகிறார். வேர்ல்ட் மியூசிக் புரோகிராம் என்னும் அமைப்பை இவரும் ஜான் ஹிகின்ஸும் துவக்கி வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள். (பங்களாதேஷ் போரின்போது இவர்கள் இருவரும்

⌘ மிருதங்கம் பற்றித் தாம் தயாரித்த புத்தகத்தை நண்பர் சுப்பிரமணியத்துக்குக் காண்பிக்கிறார் சங்கரன்

செய்த கச்சேரிகள் மூலம் சுமார் பத்தாயிரம் ரூபாய் நன்கொடையாகக் கொடுத்தார்கள்)

மேற்கத்திய இசையில் 'டியரி'யும், 'ஹார்மனி'யும் கற்றுவரும் திருச்சி சங்கரன் பியானோவும் வாசிப்பார்.

இந்திய இசையிலுள்ள தாள அமைப்பு முறை பற்றி மூன்று வருடங்களாக ஆராய்ச்சி செய்து வருகிறார் சங்கரன். தாய்—சீ என்கிற சீனமுறை இயானத் தோடு சேர்ந்த நடனத்தை ஆதாரமாகக் கொண்டு, 'சிந்தஸைசர்' முதலிய எலக்ட்ரானிக் கருவிகள் துணையோடு, தாய்—சீ—அல்ஃபா தாள வகையை அறிமுகப்படுத்தியவர் சங்கரன். சங்கரனின் முக்கிய சீடர் வில்லியம் வைநாட். இவர் கஞ்சிரா வாசிப்பாராம். இப்போது மிருதங்கத்தில் பிரமாதமாக வாசிக்கிறாராம். பெண்களும் அங்கே மிருதங்கம் கற்றுக் கொள்கிறார்கள். சங்கரன் குறிப்பிடும் மாணவி, மிக்கி ஹென்றி.

மிருதங்கம் பற்றி மேற்கத்திய மாணவர்களுக்காக ஒரு புத்தகம் தயார் செய்திருக்கிறார் சங்கரன். இத்தனை படங்களும், விளக்கங்களும், விரிவான செய்திகளும் தமிழ்நாட்டுப் புத்தகத்தில் கூடப் பார்க்க முடியாது.

பாம் ரெகார்டிங்ஸ் வெளியிட்டுள்ள 'பெர்கஷனர் இன்டர்நாஷனல்' எனும் காஸெட்டில் பல உலகக் கலைஞர்கள் வாத்தியங்களை வாசித்திருக்கிறார்கள். திருச்சி சங்கரன் மிருதங்கம். தவில் வாசித்திருப்பவர் ஓர் அமெரிக்கர். பெயர் ஜான் பெர்காமோ. திருவிடைமருதூர் வேங்கடேசனிடம் படித்தாராம்.

● ● ● ●

சங்கரனின் சக மாணவர் திரு. சுப்ரமணியம். பி. இ. இஞ்சினியரிங் படித்துவிட்டு, இப்போது சென்னையில் ஒரு தொழிலதிபராக இருக்கிறார். பழனி சுப்பிரமணிய பிள்ளை அவர்களிடம் 1961-ல் இவர் மாணவராகச் சேர்ந்த போது, சங்கரன் சீனியர் ஸ்டூடண்ட். ''குருநாதர் சொல்லிக் கொடுத்தது போக, சங்கரனும் எங்களுக்குக் கற்றுக் கொடுப்பார்'' என்றார் சுப்பிரமணியம்.

சங்கரனின் பண்பைச் சொல்கிற மாதிரி ஒரு நிகழ்ச்சி சொன்னார் சுப்பிரமணியம். ''ஸ்ரீவத்சன் என்கிற பார்வையிழந்த மிருதங்கக் கலைஞர் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே, அவருக்கு முழுக்க முழுக்க அக்கறை எடுத்துக் கொண்டு ஆர்வத்துடன் கற்பித்தவர் திருச்சி சங்கரன்தான்'' என்கிறார் சுப்பிரமணியம்.

சூடாமணி விருதை இளைஞர்களாகப் பார்த்து அவர்கள் புகழின் உச்சியில் இருக்கும்போதே வழங்க வேண்டும் என்ற யக்ஞராமனின் பொதுவான கருத்து இந்த ஆண்டும் மிகப் பொருத்தமான விதத்தில் நிறைவேறுகிறது. சங்கரனை வாழ்த்துவோர் இருஷ்ணகான சபையையும் சேர்த்தே வாழ்த்துவார்கள்.

—சாருகேசி

படங்கள்: சுபா

## எதிர்காலம் உங்கள் கையில்

சினிமா பாணியில் சொன்னால் ''உங்கள் அபிமானத் தொடர்''—

பத்திரிகை பாணியில் சொன்னால், ''மாணவ சமுதாயத்தில் பரபரப்பேற்படுத்திய தொடர்''—

நிஜமாய்ச் சொன்னால் ''உபயோகமான தொடர்''—

எ. கா. உ. கை.யில் தொடரைத்தான் சொல்கிறோம்— இந்தவாரம் முடிவடைகிறது. ஆனாலும் இது 'கமா' தான். முற்றுப் புள்ளி இல்லை.

மாணவர்கள் தங்களின், எதிர்காலம் பற்றிய பிரச்சினைகளை, சந்தேகங்களைக் குறித்து எழுதிக் கேட்கலாம். விளக்கங்கள் தனிப்பட்ட முறையிலோ, கல்கி மூலமோ வழங்கப்படும். கல்வித்துறை, மேல் படிப்பு சம்பந்தமான உபயோகமான கட்டுரைகளும் வழக்கம்போல, அவ்வப்போது வெளிவரும்.






இந்தத் தொடர் ஆரம்பித்ததும் வந்த சில கடிதங்களைப் பற்றி:

- ஒவ்வொரு வருடமும் கல்லூரிக்கு விண்ணப்பிக்கும்போது, விதம் விதமான சர்ட்டிஃபிகேட்கள், போட்டோக்கள் என்று அனுப்பவேண்டியுள்ளது. ஒவ்வொரு சர்ட்டிபிகேட்டும் வாங்க, தாலுக்கா ஆபீஸ், கெஸட்டட் ஆபீஸர் என அலைவதில் எத்தனை பண விரயம்? எத்தனை நேர விரயம்? இதை யாருமே யோசித்துப் பார்ப்பதாய்த் தெரியவில்லையே! என்று ஆதங்கப்படுகிறார் நெல்லை ஆ. கணபதி. இவர் கூறும் யோசனை: அட்மிஷன் கிடைக்காதவர்களுக்கு அவர் சம்பந்தமான சமாசாரங்களைத் திருப்பி அனுப்பி விடலாமே! அல்லது அட்மிஷன் சமயத்தில், எல்லா சர்ட்டிஃபிகேட்களையும் சரிபார்த்துக் கொள்ளட்டும். அப்ளிகேஷனுடன் எதற்காக இத்தனையும்? என்கிறார்.

- வேலூரிலிருந்து +2—ல் இரண்டாவது குரூப்பில் 83% மார்க் வாங்கின செத்ராவின் அம்மா ஏழ்மை காரணமாக மேலே படிக்க வசதியில்லை, உதவுங்களேன் என்று மிக உருக்கமாய் ஒரு கடிதம் எழுதியுள்ளார். இது போல நாடு முழுக்க நிறைய செத்ராக்கள். இவர்கள் அந்தந்தப் பகுதிகளிலுள்ள லயன்ஸ், ரோட்டரி போன்ற சமூக சேவை அமைப்புக்களை அணுகலாம். இந்த இடத்தில் சமூக சேவை அமைப்புக்களுக்குப் பணிவான வேண்டுகோள்: 'ஒரு ஏழைக்குக் கல்வியளித்தல்' எத்தனை உயர்ந்தது என்று கூறுகிற பாரதியின் வரிகள் உங்களுக்குத் தெரிந்ததுதானே? மாணவருக்கு உங்கள் சேவையின் ஒரு பகுதியாய்ப் படிப்புதவி செய்யுங்கள். ஏற்கனவே செய்து கொண்டிருப்பவர்கள், அதை மேலும் விரிவுபடுத்துங்கள்.

- இலங்கையில் படித்துக் கொண்டிருந்த மாணவர் சங்கராஜா. ஈழத் தமிழர் படுகொலை சமயத்தில் தமிழகம் வந்தவர். தன் இலங்கைப் படிப்புக்குச் சமமான வகுப்பில் இங்கே படிப்பைத் தொடர, கல்வித்துறையினரிடமிருந்து பெற்ற 'ஈக்வாலிடி சர்ட்டிஃபிகேட்'டுடன் பல பள்ளிகளிலும் ஏறி இறங்கின விஷயத்தையும், பல இடங்களில் வாசலிலேயே துரத்தியடிக்கப்பட்ட வருத்தத்தையும் சோகம் பிழியச் சொல்கிறார் தம் கடிதத்தில். நம் அனுதாபமெல்லாம் வாய்ச்சொல்லில் மட்டும்தான் போலும்!

—எஸ். சந்திரமௌலி

## முடிந்தும் முடியாத அபிமானத் தொடர்

# மாணவர் பக்கம்

## நிழல்கள்

நாங்கள்
வண்ணவண்ண
கனவுப் பூக்களோடு
கல்லூரிக் குளத்தில்
நீந்திக் களித்தோம்.

பிறகுதான் தெரிந்தது
எதிர்காலத்தின் துன்பக் கேணிக்குள்
எங்களை அமிழ்த்த
அவர்கள் தந்த
ஒத்திகைதான் அது என்று

கல்லூரிக்கு ஒரு முற்றுப்புள்ளி—
எங்கள்
வாழ்க்கைப் பயணத்திற்கு
விசா வழங்கப்பட்டது.
கறுப்புத் துணி போட்டுக்கொண்டு
நாங்கள் அதை வாங்கிக்கொண்டோம்.

கறுப்புத்துணி
எங்களைக் கௌரவிக்க
என்றார்கள்.
பின்னால்தான் புரிந்துகொண்டோம்—
எங்களின் எதிர்காலத் துயரத்திற்கு
அவர்கள்
அன்றே காட்டிய அடையாளமென்று.

'உன் நண்பர்களைக் காட்டு—
உன்னைப் பற்றிச் சொல்கிறேன்'
எங்களுக்கு நண்பர்கள்
விண்ணப்ப மனுவும்
போட்டோ ஸ்டுடியோவும்
தபால் அலுவலகமும்
பெருநகர்ப் பேருந்தும்தான்.
நாங்கள்
யாரென்று புரிகிறதா?

என் கனவுகளின்
வண்ணங்கள் கலைகின்றன.
என் நனவுகளோ
வெறும் நிழல்களாகத்தான்—
இருக்கின்றன.

**(மயன்)** (நீ. உமாபதி.)
ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி,
மாணவர் விடுதி,
சென்னை—1.





## பெண்

குணமுள்ள பெண் ஒருவனின் கருத்தில் ஒளிவீசுகிறாள்; புத்திசாலியான பெண் ஒருவனின் கவனத்தைக் கவருகிறாள்; அழகான பெண் ஒருவனின் கலையுணர்வை மயக்குகிறாள்; ஆனால் பரிவும், பாசமும் உள்ள பெண்ணே அவனைத் தன்னுரிமையாக்கிக் கொள்கிறாள்.

—அரிஸ்டாடில்.

இன்று பெண்கள் சம உரிமை அடைய வேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும்? சில உரிமைகளை ஆண்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டால் போதும்.

—பார்ட்டன் ஹில்லிஸ்.

தகவல்: ஆர். புவனேஸ்வரி
சரித்திரம் முதலாண்டு,
அண்ணாமலை அஞ்சல் வழி கல்வி
9, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை—34

படம்: கே. சரவணன்

I பி. எஸ்ஸி (கெமிஸ்ட்ரி)
அரசினர் கலைக்கல்லூரி
புலன்குறிச்சி
ராமநாதபுரம் மாவட்டம்



**வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்...**
**பற்சிதைவை எதிர்த்திடுவீர்**






எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர் நாற்றத்தையும் பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச்சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கு எதிராகப் பாதுகாப்பு, உறுதிமிக்க ஆரோக்கியமான பற்கள்.

கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா, சிறப்புடன் செயல்பட்டு நீங்கள் பல்துலக்கும் ஒவ்வொரு முறையும் உங்களுக்கு புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் அளிக்கின்றது. பற்களுக்கு ஆரோக்கியமும் உறுதியும் தருகிறது.

ஆகவே, சாப்பிட்டு முடிந்தவுடனேயே மறக்காமல் கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து பிரஷ் செய்யுங்கள்.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்**
**பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!**

CASE 882 85 TM

# வேங்கை மார்பன்

கோவி. மணிசேகரன்

## அத்தியாயம் 14

### எதிர்பாராத உத்தரவு

"தியாகவல்லி ..."

காளிங்கன் கர்ஜித்த குரல்...

அந்த வீட்டுச் சுவருக்குள்ளும் புகுந்து ஆட்டம் கொடுத்தது.

அந்தப் புலர்ந்தும் புலராத காலையில்...

அரைத் தூக்கத்துடன் மஞ்சத்தில் அவலக் கனவுகளைப் பரப்பிக் கண்மூடி இருந்த தியாகவல்லி, இந்தக் கர்ஜனை அழைப்புகேட்டு, விழித்து ஒருகணம்நிலைத்து, பின் பதற்றத்தை மடியில் கட்டிச்செருகுவது போல எழுந்து மேலாடையைச் சரி செய்து செருகிக் கொண்டாள்.

வெளியில் வருகிறாள்...

கண்களில் கொள்ளிக்கட்டையைச்செருகிக் கொண்டவன் போலக் கவனிக்கிறான் காளிங்கன்.

"என்ன நடந்தது அண்ணா? ஏன் இப்படி ஒரு பதற்றக் கூச்சல்?"

"இனி என்ன நடக்க வேண்டும்? எதற்காக இந்த முயற்சிகள்? ஒன்று காணப் பேர் அரண்மனையில் நீ அமர்ந்து நான் ஆனந்தப்பட வேண்டும்..."

"இல்லை நீங்கள் அமர்ந்து ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். இது தெரிந்த விஷயம்தானே?"

"தெரிந்துதான் எனக்கு எதிரியாகி இருக்கிறாயோ?"

"நடந்ததைக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லிவிட்டு எப்போதும் போலக் குதிக்கலாம். எதிலும் அவசரம்."

"நான் அவசரப்படவில்லை; நீ என்னை அசிங்கப்படுத்தப் பார்க்கிறாய். நீ நமது ஒற்றனை அடிக்கடி வேங்கைமார்பனுக்குத் தூது அனுப்புவதும் அங்கிருந்து செய்தி வருவதும் எனக்குத் தெரியும். கையும் பிடியுமாக எதிர்பார்த்தேன். அது நடந்து விட்டது."

தியாகவல்லி சற்றே விழிப்புணர்வு காண்கிறாள்.

"அண்ணா நீங்கள் பிடித்த ஒற்றன் நம்முடன் வந்தவனாக இருக்கலாம். ஆனால் என்னைச் சம்பந்தப்படுத்திப் பார்க்கவேண்டாம். நீங்கள் கண்களைக் காதுகளில்வைத்துச் செயல்புரிபவரானால் இப்படிப் பேச மாட்டீர்கள். காதுகளைக் கண்களில் வைத்துக் கற்பனை செய்பவர்! அதனால்தான் குருட்டுத் தனமாக என் மீது அவநம்பிக்கை ஏற்படுகிறது. வேங்கைமார்பன் நீங்கள் நினைப்பது போல விளையாட்டுப் பிள்ளையல்ல; மாமன்னருக்கும், அவருக்கும் ஏன் ரகசியத் தொடர்பு இருக்கக் கூடாது? சிலைக்குத் திருமணமாகியும் ஏன் சினந்து யுத்த முரசம் கொட்டக் கூடாது?"

ஒருகணம் இப்படியும் இருக்கலாமோ என்றும் மலைத்துப் போனான். பிறகு ஒரு முடிவுக்கு வந்து "அப்படி இருக்க நியாயமில்லை. இன்னும் சற்று நேரத்தில் அதுவும்





புரிந்து விடும். வேங்கைமார்பனுடைய ஓலை இதனை மெய்ப்பிக்கும்'' என்றான்.

ஓலையா?

அதிர்ந்து போனான்; ஆனாலும் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

''ஓலையில் என்ன இருந்ததென்று கவனிக்க வேண்டாமா? அதனால்தான் கண்களில் காதுகளை வைத்துக் கொண்டு கவனிக்கிறீர்கள் என்றேன்.''

''கவனிக்காமலில்லை; புரியாத சங்கேத பாஷையில் இருக்கிறது.''

பிழைத்தோம் என்ற பெருமூச்சு அவனது நெஞ்சில் பறிந்து இதயத்துள் அழுந்தியது.

''இதிலிருந்து புரியவில்லையா இதன் மர்மம்?''

''என்ன மர்மம் என்றுதான் பார்த்து விடுவோமே?''

''அண்ணா, வேங்கைமார்பனிடம் கொண்ட உங்கள் வெறுப்பு, மாமன்னரிடமிருந்து எதிரொலித்து விடக் கூடாது. கவனம்.''

''நீ என்னை மருட்டிப் பார்க்கிறாய்? வேங்கையன் ரகசியம் அம்பலமாகட்டுமே. இதன் எதிரொலியைக் கேட்டுத்தான் பார்ப்போமே!''

''இருவரில் யாரேனும் ஒருவர் சிறைப்படுவோம்.''

மீண்டும் மலைத்துப் போகிறான். அவ்வாறும் நிகழலாமோ? ஒற்றனை ஒப்படைத்தாகி விட்டது. இனி வருவது வரட்டும்.

அவன் உதடுகளைக் கடித்துக் கொண்டு நேரமாகி விடவே அரண்மனை நோக்கி விரைந்தான்.

அவனுக்குமுன் அரண்மனையில் நாமிருக்க வேண்டும் என்கிற முடிவுடன், கறுகறு வென்று இயங்கலானாள் இயாகவல்லி. இதன் பொருட்டு அண்ணனைப் பலிகொடுக்கவும் ஆயத்தமாகி விட்டாள்.

அரண்மனைக்கு அணித்தே காப்பிய மணங்கமழ கவிதை நடைபழகிக் கொண்டிருந்தாள் வையையெனும் பொய்யாக்குலக் கொடி.

இயாகவல்லி அரண்மனையுள் நுழைந்து மாமன்னர் உக்கிரப் பெருவழுதிப் பாண்டியரைப் பார்க்க விழைந்த போது...

அந்த அழகிய தனியறையில் அத்துணை காலையில் புயலொன்று ஆரம்பமாகியிருந்தது.

அங்கே...

பட்டத்தரசி பாண்டிமாதேவி, இளவரசி திருமேனி, புலவர் மாங்குடி மருதனார், பேரமைச்சர்களான தும்பூர் சாத்தனார், வேதவன பிரம்மராயர், மகாசேனாதிபதி காவிதி அழகன் நம்பி ஆகியோர குழுமியிருந்தனர்.

எவ்வகையிலும் வேங்கைவனத்திலிருக்கும் சிலையைக் கடத்தி வந்து விடவேண்டும் என்றும், அதுவே பாண்டியர் தம் மேலான சிறப்பைக் காக்க வல்லதென்றும் வாதுபுரிகிறாள் திருமேனி. அவளது முகத்தில் ஓர் அபாயத்தின் அறிகுறியே போன்று ரத்தம் பாரித்துக் காணப்படுகிறது. பட்டத்தரசியும் இதனையே வலியுறுத்தித் தூபமிடுகிறாள். மாமன்னரோ மௌனம் சண்டு சிலையாகி அமர்ந்திருக்கிறார்.

இன்னும் பிடிபட்ட ஒற்றனுடைய செய்தி அரண்மனையுள் நுழையவில்லை.

அண்ணன் வருவதற்குள் அவசியத்தைத் தனதாக்கிக் கொண்டு, அற்பத்தை அவன் மீது போர்த்தி விட வேண்டும்.

பனிச்சென்று ஒரு ஞானப்பிரகாசம்...

''மாமன்னர் பெருமானுக்கு என் வணக்கம். அடியாள் உள்ளே வரலாமா?''

''வா, இயாகவல்லி'' என்றார் மாமன்னர். அவள்தான் அவரது நெஞ்சில் மலர்ப்பாதை யிட்டு விட்டாளே!

இயாகவல்லி கனீரென்று சொன்னாள்: ''இளவரசியார் குறிப்பிடுவதில் மலையளவு நியாயமிருக்கிறது மன்னர் பெருமானே. நானும் இதுகுறித்து ஆலோசித்து உங்களிடம் எடுத்துச் சொல்ல வந்தபோது, இங்கும் இதே கருத்து நிலவுவதைக்கண்டு ஆனந்தம் கொண்டேன். வேங்கைமார்பன் சிலை செய்தது நியாயம் என்று ஒப்புக் கொள்ளலாம். அது அவரது காதல் பைத்தியம் என்றும் மன்னித்து விடலாம். ஆனால், அதற்கு மாலையிட்டு மணம் செய்ய முனைந்ததும், அதற்காகப் பலருக்கும் ஓலைபோக்கிப் பகிரங்கப் பிரகடனம் செய்ததும் மனிதகுல மாசுவாகும்; மன்னிக்க முடியாத அநாகரீகமாகும். நியாயப்படி யுத்தம் தொடுப்பதே சாலச் சிறந்ததாகும்''

இயாகவல்லியின் இந்தப் பேச்சு திருமேனியைத் திணறச் செய்தது.

மாமன்னர் கேட்டார்: ''யுத்தமா? இதற்கா? என்ன இயாகவல்லி, நீ இளவரசிக்கு நன்மை செய்யத்தான் இந்தமுடிவுக்கு வந்தாயா?''

''இளவரசிக்கு நன்மை செய்ய என்னைவிட வேறு யாருமில்லை என்பதை மீனாட்சியம்மன் பாதங்களைத் தொட்டுச் சத்தியம் செய்வேன்.''

''நானறிவேன்; நீ பேசுவது தான் புரியவில்லை.''

''பாண்டியர் பெருமானே யுத்தம் என்பது பகை பொருட்டல்ல; மானம் பொருட்டு. எந்த வேங்கைமார்பன் இளவரசியைச் சிலையாகச் செய்து மணமுடித்து மான பங்கம் செய்தாரோ, அதே வேங்கை மார்பனைக் கட்டிக் கொண்டு வந்து இங்கே சிலாரூபத்தில் நிற்கவைக்க வேண்டாமா?''

''நிற்க வைத்து? திருமேனியை மாலை யிடச் செய்ய வேண்டும் என்கிறாயா?''

இயாகவல்லிக்கு வந்த சிரிப்பை, ''அப்பா'' என்றலறிவிட்ட திருமேனியின் பெருத்த குரல் அடக்கி விட்டது.

''திருமேனி! இங்கு நடப்பது வாதம், நிஜமல்ல. உணர்ச்சிவசப்படாதே'' என்று எச்சரித்த பாண்டிய மாமன்னர் உக்கிரப் பெருவழுதி, இயாகவல்லியின் பக்கம் திரும்பி, ''அவனைச் சிலாரூபத்தில் நிற்க வைத்து?'' என்றார்.

''மானபங்கம் செய்ய வேண்டும்.''

மாமன்னர், 'நீயா இப்படிப் பேசுகிறாய் இயாகவல்லி' என்பது போலக் கவனிக்கிறார்.

''மன்னர்பெருமானே தங்கள் நெஞ்சம் இன்னமும் வேங்கைமார்பன்பால் இரங்குகிறது. ஒரு மாவீரனை அவமானம் செய்ய உங்கள் வீரநெஞ்சு தயங்குகிறது. இதன் பொருட்டு யுத்தம் தொடங்கினால் பார்ப்பவர் ஒருபுறமிருக்க, அகநானூறுதொகுத்த அடலேறுவா இந்த அடாத செயலைச் செய்தார் என்கிற புலவர்ப் பெருமக்களின் சத்தமிடும் தூற்றுதலுக்கும் அஞ்சுகிறீர்கள். நானறிவேன் மாமன்னா.''

''ஆகா'' என்றார் புலவர் மாங்குடி மருதனார்.

இயாகவல்லியே பேசினாள்:

''எனவே யுத்தம் வேண்டாம்; இந்தச் சத்தமும் வேண்டாம்! சிலையைக் கடத்தி வருவதன் மூலம், 'ஏ, வேங்கைமார்பா நீ சிலையை மாலையிடுவதற்குக் கூட லாயக்கில்லை; இதோ சிலையைக் கோட்டை விட்டவன்; சிலாரூபியான திருமேனியை வைத்துக் கண்போலக் காப்பாய் என்பது என்ன நிச்சயம்?' என்று எழும் கேள்வியால், விழுந்த சௌரவம் எழுந்து நிற்குமல்லவா?'

''ஓ...'' என்று வியந்தார் பேரமைச்சர் வேதவன பிரம்மராயர்.

''விழுந்த சௌரவத்தை எழுந்து நிற்கச் செய்யலாம்; சறைபட்ட திருமேனியின் வாழ்க்கையை திறைபட்டு நிமிர்ந்த முடியுமா?''

மாமன்னர் குரலுள், சோகத்தின்கருதி கேட்கிறது.

''முடியும்'' என்றாள் இயாகவல்லி. கண்களைத்திலும் கனையனைய கூர்மை.

''எப்படி இயாகவல்லி?''



''எப்பா பேப்பர் ரோஸ்ட் கேட்டா இத்தனை தடியா இருக்கே?''
''சிறப்பிதழ் சார்!''
—கி. சகாப்தீன்.

''தமிழால்! தமிழ்ச் சங்கத்தால்! தமிழ்ச் சங்கத் தலைவி என்கிற பொற்பதத்துக்கும் மேலான அற்புதப் பதவியால்!''

தியாகவல்லி இவ்விதம் கூறியதும், திருமேனி எழுந்து சென்று அவளை அணைத்துக் கொள்ளவே விரும்பினான். அப்போது பார்த்து உள்ளே நுழைந்தான் குதிரைப்படைத் தலைவன் இளங்கோவேளான்.

அவனது அவசர வருகையைப் புரிந்து கொண்ட மாமன்னர் பெருவழுதிப்பாண்டியர் ''என்ன இளங்கோ?'' என்று வினவினார்.

''பிரபோ வேங்கைமாறபனிடமிருந்து ஓர் இரகசிய ஒற்றன் பிடிபட்டிருக்கிறான். அவனிடம் ஒரு சதியோலை இருக்கிறது.''

ஒற்றனைக் காளிங்கனும் இளங்கோ வேளானும் அழைத்து வருகிறார்கள்.

''யார் நீ?''

பாண்டிய மாமன்னர் குரலில் பதற்றம் விழுந்து புரளுகிறது.

மௌனம்.

''யார் நீ?''

கடுமை பொறி பறக்கிறது.

மௌனம்.

காளிங்கன் சொன்னான்: ''மன்னவா இவன் ஊமையல்ல; நடிக்கிறான்.''

''எங்கே அந்த ஓலை?''

ஓலையை எடுத்து நீட்டுகிறான் காளிங்கன். அவனது கண்கள் தியாகவல்லியை ரகசியமாகக் கவனிக்கின்றன. தியாகவல்லியோ தீவிரமாகச் சிந்திக்கிறாள். ஓலையில் அவர் என்ன எழுதியிருக்கிறாரோ? இவர்களுக்குப் புரியப் போவதில்லை.

எவ்வளவு முயன்றும் மன்னரால் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

''என்ன எழுதியிருக்கிறது மன்னா?'' என்றார் மாங்குடி மருதனார்.

''ஏதோ சங்கேத முறையில் எழுதப்பட்டிருக்கிறது. ஒன்றும் புரியவில்லை.''

மாங்குடி மருதனார் அதனைப் பெற்று வாசிக்க முயல்கிறார். முடியவில்லை.

''மன்னா எழுதியிருப்பது என்னவோ தமிழ்மொழி. இம்மொழியில் வேற்று மொழியை எழுதியிருக்கிறார்களா என்றால் அதுவுமில்லை. ஒரு பைத்தியத்தின் கிறுக்கலாகத் தெரிகிறது.''

பாண்டிய மாமன்னர் கேட்டார்: ''காளிங்கா! இவன் கானப்பேர் ஒற்றன் தானா? இது வேங்கைமார்பன் கையெழுத்துத் தானா?''

''சந்தேகமே இல்லை, மன்னவா! வேண்டுமானால் தியாகவல்லியிடம் ஓலையைக் கொடுத்துப் பாருங்கள். என்னைவிட அவனிடம் அதிகமாகப் பழகியவள் அவள்.''

தியாகவல்லி ஓலையைப் பெற்று அவசர அவசரமாகச் செய்தியையுணர மனப்பதைத்தாலும் கண்கள் நிதானமாகவே கவனிக்கின்றன. ஏதோ பாசாங்கு செய்வதுபோல நடித்தாலும் அதன் உட்பொருளையுணரக் கணக்கிடுகிறாள். கடைசி எண்ணை வைத்துப் பகுக்கிறாள். புரிந்து விட்டது.

'ஓ... காரியம் கெட்டுவிட்டது. இந்நேரம் புறப்பட்டிருப்பார்...'

''என்ன தியாகவல்லி புரிகிறதா?''

''இது அரசாங்க சங்கேத பாஷை. ஏதோ பேலே என்குறிப்பு. மீதி வெறும் தமிழ் எழுத்துக்கள். அண்ணனுக்குவேங்கை மார்பன் மீதுள்ள ஆத்திரத்தால், எங்கோ செல்கிற ஒற்றனைத் திசை திருப்பி இருக்கிறார். இது யாருக்கோ போய்ச் சேர வேண்டிய ஓலை. அல்லது இந்த அகப்பட்டுக் கொண்ட ஆள் ஓலை எழுதப் பழகிக்கொண்டிருக்க வேண்டும். இவரிடம் வகையாக அகப்பட்டுக் கொண்டான்.''

மாமன்னர் குழம்பிப் போனார்.

''என்ன காளிங்கா?''

''என் தங்கை எதற்காக இந்த நாடகமாடுகிறாள் என்பதுதான் எனக்கே புரியவில்லை. இந்த ஒற்றன் வேங்கைவனத்தான். சந்தேகமே இல்லை.''

''இப்போது நான் உன்னையும் உன் தங்கையையுமே சந்தேகிக்க வேண்டியவனாக இருக்கிறேன். ஆனாலும் எனக்கு நன்மை செய்யவே நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்பதை நான் முற்றுமாக அறிவேன். காளிங்கா! நீ திருமேனியின் மெய்க்காப்பாளன். அவனது கௌரவத்தைக் காக்க வேண்டியவன். ஆகவே வேங்கைவனத்திலிருக்கும் திருமேனிச் சிலையை எப்படிக் கடத்தி வருவாயோ அது எனக்குத் தெரியாது. அது இங்கே வந்தே தீரவேண்டும். அதன் மூலம் யுத்தம் நிசழுமாயின் ஒரு கை பார்த்து விட வேண்டியதுதான். துணைக்கு இளங்கோ வேளானையும் அவன் சார்பில் வேறு சிலரையும் அழைத்துச் செல்லலாம். தவறினால் உனது தலை இங்கே வருவது ஒருபுறமிருக்கட்டும்; தியாகவல்லியின் தலை தப்பாது. இந்த ஒற்றனைச் சிறையில் அடையுங்கள்.''

மாமன்னர்உக்கிரப் பெருவழுதிப்பாண்டியர் எழுந்து கொண்டார். அவரது முகத்தில் உக்கிரம் தாண்டவமாடியது.

இப்படி ஓர் உத்தரவை யார்தாம் எதிர்பார்த்தார்கள்?

ஆனால் தியாகவல்லி?

இன்றிரவு வேங்கைமார்பன் மதுரைக்குப் புறப்பட்டு வருவதாகச் செய்தி அறிவித்திருக்கிறாரே!

என்ன செய்வதோ?

என்ன நடக்கப் போகிறதோ?

(தொடரும்

# மன்னார் செய்திருப்பான்!

வீட்டு வாயிற்கதவை யாரோ தடதட வென்று தட்டினார்கள்.

முந்தைய இரவு கொஞ்சம் அதிகமாகப் போட்டிருக்க அசதியில் — தலைவலி மண்டையைப் பிளக்க — ஒரு துண்டைத் தலையை சுற்றி இழுத்துக் கட்டியபடி படுக்கையில் சாய்ந்திருந்தான் மன்னார்.

''யார் அது இப்படிக் கதவைப்போட்டு இடிக்கிறது ... போய்ப் பார் செல்வி'' —என எரிச்சலுடன் குரல் கொடுத்தான் மன்னார்.

புகையும் அடுப்பினிலே காய் போட்டுக் கொண்டிருந்த செல்வி போய்க் கதவைத் திறந்தாள்.

அவளை மோதித் தள்ளியபடியே உள்ளே நுழைந்தான் முத்து.

''நீ எங்கேடா உள்ளே நுழையறே''— என அதட்டியபடி எழுந்தான் மன்னார்.

''மாமா... என்னைக் காப்பாத்து.... நாய் துரத்துது.''

மன்னார் பெரிதாகச் சிரித்தான்.

''பார்த்துக்க பிள்ளே ... உன் மாமன் மகன்... பெரிய வீரரு... நாய்க்குப் பயந்துக் கிட்டு ஓடி வராரு...'' எனச் சிரித்தான் மன்னார்.

''சாதாரண நாய் இல்லே... போலீஸ் நாய்...'' என்றான் முத்து ஓடி வந்த பதற்றம் தெளியாமல்.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான் மன்னார். ''நீ ஏண்டா இங்கே ஓடியாந்தே ...'' என அலுத்துக் கொண்டான் மன்னார். தோப்புப் பக்கம் தான் வாங்கியிருந்த கள்ளச் சாராய புட்டியை அவசரம் அவசரமாக எடுத்துக் குதிருக்குள் மறைத்து வைத்தான்.

முத்து, செல்விக்கு முறை மாப்பிள்ளை. தொழில் 'செண்ட்' வியாபாரம். மன்னாருக்குப் பிடித்த இரண்டே இரண்டு வாசனைகள்— ஒன்று தென்னங்கள்ளு; இரண்டாவது கள்ளச்சாராயம்.

ஊரில் உள்ள ரௌடிகளின் பெயர்களில் போலீஸ் ஸ்டேஷனில் மன்னார் பெயரும் இருந்தது. எந்த அரசியல் கட்சி ஆர்ப்பாட்டம் நடத்தினாலும் மன்னாருக்குப் பண வரவு உண்டு. ஆனால், ஆர்ப்பாட்டத்திற்கு முதல் நாள் இரவு போலீஸ் லாரி அவனை வீடு தேடி வந்து அழைத்துப் போகும்.

''நீ வருவேன்னு தெரியும் ஸாரு ... அதான் அட்டவே ரெடியாயிட்டேன்...'' என்று ஏதோ ஊர்வலத்திற்கு மாப்பிள்ளை போவது போல் வண்டியில் ஏறிக் கொள்வான் மன்னார்.

சென்ற ஒரு வாரமாக மன்னார் வெளியே தலை காட்டவில்லை. இரவு தோப்பு வரை சரக்கு வாங்கப் போனது தவிர. பேட்டையில் பெரிய ரௌடி — கேடி ரங்கனை யாரோ தீர்த்து விட்டிருந்தார்கள். மன்னாருக்கும் அவனுக்கும் அவ்வளவாகப் போதாது. தானாக்காரர்கள் இவனைப் பார்த்துச் சந்தேகப்படுவார்கள். அனாவசியமாகக்கேள்விகள் கேட்பார்கள். சும்மா இருக்க மாட்டார்கள். நாலு தட்டு தட்டுவார்கள்... எதற்கு வீண் வம்பு.

மன்னாருக்கு முத்துவைப் பிடிக்காது. கையிலே ஒரு நல்ல தொழில் வேண்டாம்... செண்டும், ஊதுவத்தியும் வீடு வீடாகக் கொண்டு சென்று விற்று மாடிவீடு கட்டவா முடியும்? பாக்கிறதுக்காவது வாட்டசாட்டமாக இருக்கானா?... உடைந்து போகும் குச்சி மாதிரி தேகவாகு. நிமிர்ந்து நின்று ரெண்டு அடிகொடுப்பானா, இல்லே... தாங்குவானா?... தன் பெண்ணை அவனுக்குத் தர முடியாது என்று திட்டவட்டமாகச்சொல்லி விட்டான் மன்னார்.

ஆனால் அவன் பெண் செல்வி — அவனுடைய சிவந்த உடலிலும் — சுருள் சுருளான கேசத்திலும் — அயர வைக்கும் சிரிப்பிலும் — கண்ணியமான நடத்தையிலும் தன் மனத்தைப் பறி கொடுத்துவிட்டாள்.

மன்னார் இப்போது உண்மையில் கலங்கிப் போனான். எந்தப் போலீஸ் வரக் கூடாது என்று பயந்து கொண்டிருந்தானோ, அவர்களை வீட்டுக்கே கூட்டிவந்து விட்டானே— இந்தப் பாவிப்பயல் முத்து!

கதவை உதைத்துத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தார்கள் இரண்டு சால்வடை பிள்கள். கன்றுக்குட்டி உயரத்தில் ஒரு நாயை ஒருவன் இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தான். அது முத்துவைச் சுற்றிச் சுற்றி வந்தது.

''இங்கே வந்து பதுங்கிக்கிட்டா நம்ம 'ஸீஸர்' விட்டுடுமா?... வாடா இங்கே!''

முத்து நடுங்கிக் கொண்டே போனான்.

தன் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்துப் போட்டார் அவர். நாய் அதையும் முகர்ந்து பின்னர் முத்துவின் பக்கம் நகர்ந்தது.

''இந்தக் கைக்குட்டை அந்தக் கேடி ரங்கன் 'பாடி' கிட்டே இருந்தது. இதை மோப்பம் பிடித்து ''ஸீஸர்'' உன்கிட்ட வந்திருச்சு... இது உன்னுடையதுதானே?''

''இல்லீங்க... இது என்னுது இல்லீங்க....'

என அலறினான் முத்து.

இன்னொரு கான்ஸ்டபிள் அவன் கால்களுக்குக் கீழே லத்தியால் போட்டார்.

''நடடா ஸ்டேஷனுக்கு... கேடி ரங்கனே நீதானே தீர்த்துக் கட்டினே?... இங்கே வந்து ஒளிஞ்சுக்கிட்டா விட்டுடுவோமா?''

இன்னொரு கான்ஸ்டபிள் 'பக்' என்று சிரித்தார்.

''இவனா? கேடி ரங்கன் மூச்சு விட்டான்னா பத்தடி உருண்டு ஓடுவானே... இந்த மன்னாரைச் சொல்லு... செஞ்சிருப்பான்...''

''நீயும் நட'' என்றார் போலீஸ்காரர், மன்னாரைப் பார்த்து...

''என் பொண்ணு மேல சத்தியமுங்க... நான் இந்த வீட்டு வாசற்படி தாண்டலே..''

முத்து சட்டென்று போலீஸ்காரர் கீழே போட்டிருந்த கைக்குட்டையை எடுத்து முகர்ந்து பார்த்தான்.

''எனக்குக் கவனம் வருதுங்க..இது ஒரு புது செண்ட்...பத்து நாள் முந்திதான் என்கிட்ட வந்தது... ஒரே ஒரு பாட்டில் தான் வித்தேன்... யாருக்குக் கொடுத்தேன்? உம்... யாருக்குக் கொடுத்தேன்?...''— முத்து தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தான்.

''நல்லாக் கவனப்படுத்திப் பாரு... யாருக்குக் கொடுத்தே... சொல்லலேன்னு உன்னேத்தான் பிடிச்சு உள்ளே போடுவோம்''—என மிரட்டினார் கான்ஸ்டபிள்.

''இருங்க... இருங்க... கொஞ்சம் இருங்க... ஞாபகப்படுத்திச் சொல்றேன்... கவனம் வந்தவுடனே நானே நேரில் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சொல்றேனே'' என்று கெஞ்சினான் முத்து.

போலீஸ்காரர்கள் நாயை இழுத்துக் கொண்டு வெளியே போனார்கள். முத்து அயர்ந்து போய் ஒரு மூலையில் உட்கார்ந்தான்.




"இவங்க இத்தனை வருஷம் என்ன பண்ணிகிட்டிருந் தாங்க"?
"அந்த ராகமாலிகா கடை சேலையை கட்டிக்க ஆரம்பிச்ச திலிருந்துதான் அவங்களுக்கு நடனம் கத்துக்க ஆசை வந்ததாம்"
அரங்கேற்றம்
பர்வதவர்தனி

''நெனப்பு வந்ததாடா '' எனக் கேட்டான் மன்னார் பதினைந்து நிமிடம் கழித்து.

முத்து செல்வி கொடுத்த தேநீரை நாவால் ருசித்தான். அப்படியே செல்வியைக் கண்களால் விழுங்கினான்.

தேநீர்க் கோப்பையைப் பட்டென்று கீழே வைத்தான். ''நெனப்பு வந்திருச்சு, மாமா ... அந்த செண்ட் புட்டியை உன் கிட்டத்தான் கொடுத்தேன்'' என்றான்.

மன்னார் பதறினான் ''டேய், டேய் ..''

''அன்னிக்குச் செல்வியைப் பாக்க வந்தப்போ, அவளுக்காக நான் கொண்டு வந்த செண்டை நீ தட்டிப் பிடுங்கிக்கிட்டே பாரு... அந்தப் புட்டிதான் அது....''

''அதைக்கோபத்தில் அன்னிக்கே சாக்கடையில் கடாசிட்டேண்டா!''

''சரி... போலீஸ்காரங்க கேட்டாங்கன்னு அப்படியே சொல்லு... நம்பினாலும் நம்புவாங்க... நான் வரேன், செல்வி'' —புறப்பட்டான் முத்து.

''எங்கேடா போறே '' —என வழியை மறித்தான் மன்னார்.

''எங்கே .... போலீஸ் ஸ்டேஷனுக்குத்தான். போகல்லேன்னா, அவங்க மறுபடியும் நாயைக் கூட்டிக்கிட்டு வந்து, முட்டிக்கு முட்டி தட்டிடுவாங்களே.''

''முத்து... நான் உன் மாமண்டா.... உங்கம்மா கூடப் பிறந்தவன்...''

''இதெல்லாம்இப்பத்தான் கவனம் வந்தாக்கும்.செல்வியைப்பெண்கேட்டப்போ..''

''அதெல்லாம் அப்போ... இப்போ சொல்றேன்... செல்வி உனக்குத்தான்...''

''மாமா... சும்மா ஆசை காட்டாதே... நேற்று நீ போட்டது இன்னும் பூராத் தெளியலே... உன்னே நம்பறதுக்கு அந்தப் போலீஸ்காரங்களே தேவலே.''

மன்னாரு தள்ளாடியபடி எழுந்தான். ஒரு ஓரத்தில் வைக்கப்பட்டிருக்க துரு ஏறிய டிரங்க் பெட்டியைக் குடைந்தான். அழுக்கேறிப்போன ஒரு மஞ்சள் கயிற்றை அதில் கோத்திருந்த தாலியுடன் எடுத்து முத்துவிடம் நீட்டினான்.

''இந்தா...இது அவ ஆத்தா போட்டுக்கிட்டிருந்த தாலி... இப்பவே நீ இவ கழுத்திலே கட்டு...''

முத்து தயங்கினான்... மன்னார் தரதரவென்று செல்வியின் கையைப் பிடித்து இழுத்து வந்தவுடன், அந்தத் தாலியை வாங்கி அவள் கழுத்தில் கட்டினான்.

செல்வியும் முத்துவும் மன்னாரின் கால்களில் விழுந்து வணங்கினார்கள்.

அன்று இரவு பிரபலமான ப்ரிவேட்டரி ஹோட்டலில் தனியறை—

செல்வியுடன் முத்து அந்தப் போலீஸ்காரர்களுக்குத் 'தனி விருந்து' கொடுத்துக் கொண்டிருந்தான். அவர்கள் இருவரும் முத்துவுடன் படித்தவர்கள் என்பதும், நடந்தது அத்தனையும் அவர்கள் — செல்வி உள்பட — நடத்திய நாடகம் என்பதும் கேடி ரங்கனைக் கொன்றவனை எப்போதோ கைது செய்தாகி விட்டது என்ற விவரமும் குடிசையிலே முடங்கிக் கிடந்த மன்னாருக்குத் தெரியாது.

# காதல் ஜோடி

போட்டி: 13



உங்களைக் கவர்ந்த திரை உலக காதல் ஜோடி யார்? ஏன்? கீழேயுள்ள வெற்றிடத்தில் சில வரிகளில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு பட்டுப் புடைவை பரிசு. இதைப் பெறுபவர் ஆண் வாசகராயின் தமக்குப் பிரியமானவருக்குக் கொடுத்து மகிழலாம். உறையின் மீது ''காதல் ஜோடி'' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: 13.8.84.

**40 பட்டுப் புடைவைகளுள் ஒன்றை நீங்கள் பெற, வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.**

என்பெயர் : ................................

விலாசம் : ................................

................................

குறிப்பு: பட்டுப் புடவை பரிசுத்திட்டம் ஆரம்பித்த சமயம் இரு போட்டிகளுக்கான யோசனைகளைத் தந்தவர் குளச்சல் எம். முகமது இப்ராஹிம்.

# பட்டுப் புடைவை பரிசுத் திட்டம்

# சொல்லுங்களேன்!
# குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானமாக ஹார்லிக்ஸ் இருப்பது ஏன்?

## ரூ.5 லட்சத்திற்கும் அதிகமான பரிசுகளைப் பெறுங்கள் தமிழ் நாட்டில் மட்டுமே!



### முதல் பரிசு

ரூ. 75,000க்கும் அதிகமான பெறுமானமுள்ள ஒரு சொகுசு அம்பாசடர் மார்க் IV கார்.



### 5 இரண்டாவது பரிசுகள்

மின்னும் தங்கநகை செட்டுகள், ஒவ்வொன்றும் ரூ. 25,000 மதிப்புடையது.



### 200 மூன்றுவது பரிசுகள்

அருமையான ஃபிலிஃப்ஸ் 'டு-இன்-ஒன்', ஒவ்வொன்றும் ரூ. 1,500-க்கும் அதிகமான மதிப்புடையது.

**மேலும்**

**800 முந்திக் கொண்டோர் பரிசுகள்!**

மாதத்தில் இரண்டுமுறை, முதல் 200 பூர்த்தியான நுழைவுத்-தாள்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 50 பெறுமான பரிசு.

8320

## குடும்பம் முழுவதற்குமான ஒரு போட்டி

அனைவரும் பங்குக்கொள்ளக் கூடிய ஒரு எளிய போட்டியில் 1000-க்கும் அதிகமான கவர்ச்சிகரமான பரிசுகளை ஹார்லிக்ஸ் வழங்குகிறது. கீழே 4 படங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன—ஒரு டாக்டர், ஒரு குடும்பத்தலைவி, ஒரு பாட்டனார், ஒரு குழந்தை. பக்கத்தில், அவர்கள் ஹார்லிக்ஸை ஏன் விரும்புகிறார்கள் என்று 4 கருத்துகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவே—இந்த கருத்துக்களை யார் யார் சொல்லியிருப்பார்கள் என்று இணைக்கவேண்டும். உதாரணமாக, டாக்டர் (A) கூறியது (2) கருத்து. இப்பொழுது, நீங்கள் எந்த படத்திற்கு எந்தக் கருத்து சிறப்பாக பொருந்துகிறது என்பதைப் படங்களுடன் பொருத்திக் காட்டுங்கள்.

நுழைவுத்தாளில் உள்ள கோடிட்ட இடத்தில் நாங்கள் உதாரணத்தில் காட்டியுள்ளது போல பதில்களை எழுதி நிரப்புங்கள்.

## பிறகு...

பின்வரும் வாக்கியத்தை பூர்த்தி செய்யுங்கள்—
'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில்....'

## நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்களை வேண்டுமானாலும் அனுப்பலாம்

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் நுழைவுத்தாளை நீங்கள் பயன்படுத்தலாம். அல்லது உங்கள் அருகிலுள்ள ஹார்லிக்ஸ் கடையிலிருந்து உங்கள் நுழைவுத்தாளை வாங்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு நுழைவுத்தாளுடனும் 450 g. அல்லது 800 g. அல்லது 1000 g. ஜாடியின் உட்புற அலுமினிய தகடு 'சீல்' ஒன்றை இணைத்து அனுப்பவேண்டும். நினைவிருக்கட்டும்: ஒவ்வொரு மாதம் முதல் தேதியும் மற்றும் 16-ம் தேதியும் வந்து சேரும் பூர்த்தியான முதல் 200 நுழைவுத் தாள்களுக்கு பிரத்யேகப் பரிசுகள் கிடைக்கும். ஆகையால், நீங்கள் முந்தினால், இப்பரிசைப் பெறுவதுடன் மற்ற பரிசுகளுக்கும் தகுதியுடையவர்களாக இருப்பீர்கள்.

நுழைவுத்தாளை முகவரிக்கு தபாலில் அனுப்புங்கள்:
ஹார்லிக்ஸ் ஃபாமிலி கான்டெஸ்ட் எச் எம் எம் லிட்.,
போஸ்ட் பேக் நம்பர்: 5637 சென்னை -600 006.

## விதிகள் மற்றும் வரைமுறைகள்

1. நுழைவுத்தாள்களை தமிழிலோ, அல்லது ஆங்கிலத்திலோ எழுதி அனுப்பலாம்.
2. எச்எம்எம் லிட்., எச்டிஏ மற்றும் பாரி அண்ட் கோ லிட். ஊழியரோ, மற்றும் அவர்களது குடும்பத்தினரோ இதில் கலந்துகொள்ள முடியாது.
3. நுழைவுத்தாள்கள் சாதாரணத் தபாலில்தான் அனுப்பவேண்டும். பதிவுத்தபாலிலோ, நேரிலோ, அல்லது குறைவான தபால்தலை ஒட்டி அனுப்பினாலோ ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
4. நுழைவுத்தாள்களை சுதந்திரமான ஒரு நடுவர் குழு மதிப்பிடும். முற்றிலும் திருத்தமான நுழைவுத்தாள்களும், அவைகளில் எழுதிய வாக்கியங்களில் எல்லாவற்றையும்விட சிறந்ததாக கருதப்படுவதே தேர்ந்தெடுக்கப்படும்.

விதிகள் மற்றும் வரைமுறைகளின் விவரங்களிற்கு நுழைவுத்தாளுடன் உங்கள் விற்பனையாளர்களிடம் விசாரிக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| A. டாக்டர் | B. குடும்பத்தலைவி | 1. குழந்தைப் பருவத்திலிருந்து 60 வருடங்களுக்கும் மேலாக நான் நம்பிக்கை வைத்துள்ள பழக்கம் இது. இந்த நாட்களில் நீங்கள் எவ்வளவு விஷயங்களைத்தான் நம்பமுடிகிறது. | 2. ஆம், நான் அதை அருந்துகிறேன்! எனது நோயாளிகளையும் ஒரு நாளைக்கு இருமுறை ஹார்லிக்ஸ் குடிக்கும்படி சிபாரிசு செய்கிறேன். |
| C. பாட்டனார் | D. குழந்தை. | 3. ஹார்லிக்ஸ் எவ்வளவோ சுவையாக இருக்கிறது! அம்மா எனக்கு அதைப் பாலுடன் கலந்துத் தருகிறாள். ஆனால் நான் அதை அப்படியே சாப்பிடுவேன்! | 4. என் குடும்பத்தின் ஆரோக்கியத்துடன் நான் விளையாட முடியாது. இப்பொழுது பால் இருக்கிற நிலையைப் பார்க்கும் போது, ஹார்லிக்ஸில் எனக்கு முழுப்பலனும் கிடைக்கிறது. |




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

| A. | B. | C. | D. |
|---|---|---|---|
| 2 | | | |

'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில் ________

பெயர்: ________

முகவரி: ________

இங்கே கத்தரித்து அனுப்பவும்

முந்துங்கள்!
போட்டி முடிவடையும் தேதி: 15 செப்டம்பர், 1984.

# மூர்த்தியின் மோகங்கள்



என் தம்பி பிள்ளை மூர்த்தி இருக்கானே அவனைத் தெரிந்த நாள் முதலா, ஏன் அவன் பிறந்த நாள் முதலாக எனக்குக் கவலைதான். அவனைப் பொறுப்பாகப் பார்த்துக் கொள்வது பெரியப்பாவாகிய என்னுடைய கடமை என்று நினைத்தேன். அதைவிடப் பெரிய பொறுப்பு எந்தப் பெரியப்பனுக்கும் இருந்திருக்காது. மூர்த்தி இருந்த இடத்தில் பிரச்னை இருந்தது.

மூர்த்தி எதையுமே அரை குறையாகச் செய்ய மாட்டான். அவனுக்கிருந்த அளவு கடந்த கற்பனையையும் சக்தியையும் வைத்துக்கொண்டு தவித்தான். திடீர் திடீரென்று ஞானோதயம் தோன்றும். அடுத்தாற்போல் என்ன செய்வான் என்று சொல்லவே முடியாது. ஒரு காலத்தில் பூச்சி இயல் நிபுணன் ஆக வேண்டும் என்பதே அவன் வாழ்க்கை லட்சியமாக இருந்தது. இதுக்குக் காரணம் என்னவோ நான்தான். அவனுடைய பதினைவது பிறந்த நாளன்று 'பூச்சிகள் வாழ்க்கை' என்று ஒரு புத்தகத்தை அவனுக்குப் பரிசாகக் கொடுத்தேன். மூர்த்தி அதை வைத்த கண் வாங்காமல் வாசித்தான். வண்ணப் படங்களைப் பார்த்து மகிழ்ந்து போனான். பூச்சிகள் உலகின் லாவண்யம் அவனைக் கட்டிப் போட்டது. அதன் விளைவு என்னவோ ஒரு துன்பச் சொப்பனம்தான்.

பார்க்கச் சகிக்காத வண்டுகளையும் பூச்சிகளையும் சேகரிக்க ஆரம்பித்தான் மூர்த்தி. அவற்றைக் கொண்டு கண்ணாடி ஜாடிகளில் அடைத்தான். ஆனால் அனேகமாய் அவை அவன் செல்லப் பிள்ளைகளாகவே வளர்ந்தன. வீடு அல்லோல கல்லோலப் பட்டது. வீட்டுச் சோபாவில் உட்கார எனக்கு ஒரே நடுக்கம். வண்டோ கரப்பான் பூச்சியோ சட்டைக் கையில் 'வாக்கிங்' கிளம்பிவிடும். நேரத்துக்கு வீடு திரும்பாமல் பூச்சிகளைத் தேடி அலைந்தான் மூர்த்தி. தன்னையும் அசிங்கப் படுத்திக் கொண்டு வீட்டையும் அலங்கோலப்படுத்தினான்.

ஒருமுறை அவன் பெற்றோருக்கு ரொம்ப வேண்டிய இளைஞன் ஒருவன் தங்கை மீனாவைப் பார்க்க வருவதாய் இருந்தது. மூர்த்தியின் அப்பா இந்த இடம் குதிர்ந்து விடும் என்று ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தார். மூர்த்தியை வாலைச் சுருட்டிக் கொண்டு இருக்க வேண்டும் என்று மிரட்டி வைத்திருந்தார்கள். எல்லாம் நல்லபடியாக முடிந்து. பிள்ளை வீட்டார் முகூர்த்தத் தேதி குறிக்க நினைத்த சமயத்தில் மாப்பிள்ளை 'வீல்' என்ற சப்தத்துடன் ஒரு காலை மட்டும் நீட்டினார். அவர் ஷூவின் மேல் உட்கார்ந்திருந்த நத்தை அவரைப் பார்த்துக் கோபத்துடன் முறைத்தது. புயல் போல் ஓடிவந்த மூர்த்தியின் தோளில் அவனுடைய செல்ல எலி உட்கார்ந்து கொண்டிருந்தது. அவன் மேல் சட்டை முழுவதும் விதவிதமான வண்டுகள் ஊர்ந்தன. பயந்து செத்துக் கொண்டிருந்த இளைஞனைப் பார்த்து ஒரு முறை முறைத்து விட்டுத் தன் நத்தையை எடுத்துக் கொண்டு வெளியேறினான். மாப்பிள்ளை வீட்டார் கோபித்துக்கொண்டு போய்விட்டார்கள். மீனாவுக்கு உள்ளூர ரொம்ப சந்தோஷம். மாப்பிள்ளை அவளை விடக் குள்ளமாக இருந்தான். ஆனால் அவள் அப்பா ருத்ர தாண்டவம் செய்தார். மூர்த்தி தன் செல்லங்களை விட்டொழிக்க வேண்டியதாய்ப் போயிற்று.

பூச்சிப் பைத்தியம் அடங்கியது. ஆனால் வேறு தொல்லைகள் தொடர்ந்தன. ஒரு கட்டத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ் ஜுரம் மூர்த்தியின் மூளைக்கு ஏறியது. ஒரு தொள தொள அங்கியை மாட்டிக் கொண்டு திரிந்தான். அக்காவின் வயலினை ரம்பம் போல் அறுத்து அவன் ஆத்திரத்தைக் கிளப்பினான். அதோடு நில்லாமல் வீட்டுக்கு வந்த விருந்தினரை அவர்கள் அறியாமல் பின்தொடர ஆரம்பித்தான். அவன் தந்தையின் நண்பர் ஒருவர் மூர்த்தி தன்னைப் பின்தொடர்ந்து வந்து. திடீரென்று மேலே பாய்ந்து தன் பாக்கெட்டுகளைச் சோதனை போட்டதாகப் புகார் செய்தார். குழந்தை என்னவோ காணாமற் போன மோதிரத்தைத் தேடுவதாகச் சாதித்தான். மோதிரம் சில நாட்களுக்குப் பிறகு ஒரு பழைய பெட்டியைக் குடைந்தபோது கிடைத்தது.

இரண்டு நாட்களுக்கு அவனை ஒரு அறையில் பூட்டி வைத்து ரஞ்சி டிராபி மாட்சுக்கு வாங்கிய டிக்கெட்டுகளைக் கிழித்தெறிந்தார் அப்பா. இதன் பிறகு மூர்த்தியின் ஒற்றுடல் பைத்தியம் ஓய்ந்தது.

தொடர்ந்து அவனுக்குப் பிடித்த பைத்தியங்கள் அபாயக் குறைவாக இருந்தாலும் தொல்லையில் குறையாய் இல்லை. ஒரு சமயம் தான் ஒரு கவிஞன் என்ற நினைப்பு எப்படியோ ஏற்பட்டுப் போய்த் தன் 'கவிதை'களை நேரம் கெட்ட நேரங்களில் படித்துக் காட்டி 'போர்' அடித்தான். மீனாவும் அவள் தோழிகளும் அவன் எழுதிய

பிரேமா சாஸ்திரி

காதல் கவிதைகளைப் படித்துச் சிரிப்பதைப் பார்த்த பிறகு அவன் கவிதை ஊற்று குறைந்து போயிற்று.

உணர்ச்சிகளையே விட்டு ஒழித்தான் மூர்த்தி. 'கம்யூனிஸ்ட்' ஆக மாறி சதா பிற்போக்குவாதிகளையும் பூர்ஷ்வாக்களையும் திட்டித் தீர்த்தான். ஒரு நாள் பொதுக் கூட்டத்திலிருந்து திரும்பிய மூர்த்தி தன் துணி அலமாரியில் ஒரு சட்டை கூட இல்லாததைக் கண்டு திகைத்துப் போனான். ''ஓ ஏழைகளுக்கு கிறிஸ்துமஸ் சமயத்தில் விநியோகிக்கச் சொல்லி எடுத்துக் கொடுத்து விட்டேன். இல்லாதவர்களுக்கு இருப்பவர்கள்தானே கொடுக்க வேண்டும்'' என்றாள் மீனா விஷமத்தனமாக.

மூர்த்தி நல்ல மார்க்குகள் வாங்கி காலேஜில் சேர்ந்தான். அரசாங்க ஆராய்ச்சிக் கூடத்தில் நல்ல வேலையும் கிடைத்தது. 'அப்பாடி இனிக் கவலையில்லை' என்று மூச்சு விடுவதற்குள் மற்றொரு பைத்தியம் அவனை ஆட்கொண்டது.... அதுதான் பிரிட்ஜ்.

இந்தச் சீட்டாட்டத்துக்கு முன் மற்ற எல்லாப் பித்துக்களும் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டன. மூர்த்தியின் பேச்சு, மூச்சு, கனவு — எல்லாமே பிரிட்ஜ் ஒன்றுதான். கல்பெர்ட்ஸனின் அத்தனை புத்தகங்களையும் வாங்கிக் கரைத்துக் குடித்தான். விளையாட்டில் ஈடுபட்ட நேரம் போக மீதி நேரத்தில் பிரிட்ஜ் பற்றிப் பேசினான். பிரிட்ஜ் சிக்கல்களை விவாதித்தான். பிரிட்ஜ் புத்தகங்கள் படித்தான். மணிக் கணக்காக இப்படியே பொழுதைக் கழித்தான். எனக்கு ஒன்றும் புரியாததாலும் இதனால் பிறருக்கு அதிக தொல்லை இல்லாததாலும் நாங்கள் விஷயத்தைக் கண்டு கொள்ளவில்லை.

இந்தக் கிறுக்குத் தனங்களினால், மூர்த்தியின் மவுசு ஒன்றும் குறைந்து விடவில்லை. அக்கம் பக்கத்திலிருந்து ஜாதகங்கள் வந்து குவிந்த வண்ணம் இருந்தன. கடைசியில் கமலாவுக்கும் அவனுக்கும் கல்யாணம் நிச்சயமானபோது எனக்குப் பரம சந்தோஷம். கமலாவை எனக்கு முன்னமேயே பரிச்சயம் உண்டு. அவனுக்கு ரொம்பப் பொருத்தமானவள். சிரித்த முகத்தோடு பளிச்சென்று இருப்பாள். எல்லாவற்றுக்கும் மேலாக (மூர்த்தியின் கற்பனைக்



னும் கனவுக்கும் நேர்மாருக) சிந்தனையிலும் செயலிலும் யதார்த்தமானவள். மூர்த்திக்கும் ஒரே மகிழ்ச்சி. அவள் அப்பா ஒரு சிறந்த பிரிட்ஜ் ஆட்டக்காரர் என்பதால்.

ஆரம்பத்தில் புது மணத் தம்பதிகள் ரொம்ப சந்தோஷமாக இருந்தார்கள். நானும் அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போவேன். சுசீலா எப்போதும் இன்முகத்தோடு வரவேற்பாள். நான் போகும் போதெல்லாம் அவள் அப்பாவும் அங்கு இருப்பார். மாமனும் மாப்பிள்ளையுமாய் அன்னியோன்யமாய் உட்கார்ந்து பிரிட்ஜை அக்கக்காய்ப் பிய்த்து அலசிக் கொண்டிருப்பார்கள்.

இதெல்லாம் மேல் பூச்சான சந்தோஷம் என்று நான் புரிந்து கொள்ள எட்டு மாதங்கள் ஆயிற்று. நான் போன நேரங்களில் மூர்த்தி வீட்டில் இருப்பது என்பது அரிதாயிற்று. இருந்தாலும் வெளியே கிளம்பத் தயார் செய்து கொண்டிருப்பான். சில சமயங்களில் பேசாமல் தன் அறைக்குள் போய் உட்கார்ந்து கொள்வான். சுசீலாவும் கலகலப்பில்லாமல் இருந்தாள்.. மூர்த்தி வெளியே போனதும் வாயே திறக்காமல் ஸ்வெட்டரா பின்ன உட்கார்ந்து விடுவாள். என்ன ஆயிற்று என்று கண்டு பிடிக்கவே எனக்குச் சில நாட்கள் பிடித்தது. விஷயம் தெரிந்ததும் நிலைமை சற்று மோசமாகவே இருப்பது புரிந்தது.

சுருக்கமாகச் சொன்னால் சுசீலாவுக்கு பிரிட்ஜின் பேரில் ஒரே வெறுப்பு. அவள் அப்பா ஒரு சிறந்த பிரிட்ஜ் ஆட்டக்காரராக இருந்ததால் இவ்விஷயம் எனக்கு ஆச்சரியமளித்தது. பின்னால்தான் உணர்ந்தேன் அவள் வெறுப்புக்குக் காரணமே அதுதான் என்று. மூர்த்தி மணிக்கணக்காக சீட்டாட்ட மேஜை அருகே உட்கார்ந்திருப்பது சுசீலாவுக்குப் பிடிக்கவில்லை. அவன் தன்னிடம் கவனம் செலுத்த வேண்டும் என்று விரும்பினாள். மூர்த்தியோ சுசீலா தான் பிரிட்ஜ் ஆடக் கற்றுக் கொள்ளட்டுமே என்று பிடிவாதம் பிடித்தான். இரண்டு பேரும் விட்டுக் கொடுக்காமல் அல்பத்தனமாய்ச் சண்டை போட்டுக் கொண்டார்கள்.

நான் என்னவோ சுசீலாவின் கட்சிதான். மூர்த்தியினுடைய தீவிர குணம் எனக்கு நன்றாகவே தெரியும். சுசீலாவிடம் எனக்கு தனிப் பிரியமும் உண்டு. இந்தப் புதுப் பழக்கம் ஆபத்தானதாய் இல்லாவிட்டாலும் ரொம்ப விலை உயர்வாய் இருந்தது. மூர்த்தி சீட்டு விளையாட வாங்கிப் போட்ட புது மேஜையைப் பார்த்ததும் சுசீலாவின் கண்களில் கவலை நிரம்பியது. பிரிட்ஜ் விளையாட்டைப் பற்றிய புத்தகங்களை வாங்கி எல்லா அலமாரிகளையும் நிரப்பினான் மூர்த்தி. ஒருமுறை தலை வலித்ததால் அவர்களுடைய படுக்கை அறையில் படுத்துக் கொண்டேன். தலைகாணிக்கு அடியில் பிரிட்ஜ் புத்தகங்கள் — தடி தடியாக. அந்தக் கணமே சுசீலாவுக்கு உதவ வேண்டும் என்று தீர்மானித்து விட்டேன்.

அடுத்த நாளே ஆரம்பித்தேன். மூர்த்தி வெளியே கிளம்பிக் கொண்டிருந்தான்.

''என்னடா மூர்த்தி, பிரிட்ஜ் விளையாடப் போறியா? இன்னைக்கு நானும் உன்னோட வரலாம்னு பார்க்கிறேன்.''

மூர்த்தி ஆச்சரியத்தோடு பார்த்தான்.

''ஓ தாராளமா வாங்களேன்''; என்று சமாளித்தான்.

அன்று மாலை கிளப்பில் அவனுக்கு ஜோடியாய் விளையாடப் பிடிவாதம் பிடித்தேன். வேண்டுமென்றே தவருக ஆடித் தோற்கச் செய்தேன். இன்னொருத்தனாய் இருந்தால் ஆட்டத்தை விட்டு விட்டு எழுந்து போயிருப்பான். ஆனால் மூர்த்தி உணர்ச்சிகளை நன்றாகவே கட்டுப்படுத்திக் கொண்டான். எவ்வளவு பெரிய தப்பை நான் செய்தாலும் 'துரதிர்ஷ்டம்தான். அடுத்த முறை பார்க்கலாம்' என்று சொல்லி விடுவான்.

இப்படியே மூன்று நாட்கள் ஆகிவிட்டன. நான்காம் நாள் மூர்த்தி வீட்டிற்குப் போய் பிரிட்ஜ் விளையாடக் கூப்பிட்டபோது, சுசீலா மெல்லச் சிரித்தாள்.

''இன்னிக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது பெரியப்பா....'' என்ருன் மூர்த்தி.

நான் ஏமாற்றமடைந்தது போல் நடித்தேன். அடுத்த நாள் கடைத் தெருவுக்குப் போகனும் என்றுசொல்லிவிட்டான் மூர்த்தி. சில நாட்கள் கழித்துக் கையடியில் புத்தகக் கட்டு ஒன்றைத் தூக்கிக் கொண்டு வந்தான் மூர்த்தி. 'பெரியப்பா, உங்களுக்கு இந்த விளையாட்டு இவ்வளவு பிடிக்கும் என்று நான் நினைக்கவில்லை. இந்தப் புத்தகங்களைப் படித்து ஒவ்வொரு அத்தியாயமாய் நாம் விமரிசிக்கலாம். கடைசியில் நீங்களே என்னைத் தோற்கடிக்கும் அளவுக்கு முன்னேறிவிடுவீர்கள்'' என்ருன்.

உள்ளூர நடுங்கினுலும் அவனுடைய ஆவல் ததும்பும் முகத்தைப் பார்த்ததும் மறுப்பு கூற மனமில்லை. அந்தப் புத்தகத்தைப் படிக்க முயன்ற அன்றிரவு ஒரு கோர சொப்பனம் போல் இருந்தது. என்னுடைய திட்டம் புஸ்வாணம்தான்.

இருந்தாலும் விடாமல் யோசித்தேன். மூர்த்திக்குப் புதிதாக எதையேனும் அறிமுகம் செய்து வைத்தால் பழையதை மறந்துவிடும் பழக்கம் உண்டு என்று எனக்குத் தெரியும். ஒரு வாரம் கழித்து அவன் வீட்டிற்குத் திரும்பப் போனேன்.

பாங்க் காஷியர்: நல்லவேளை; வந்து என்னைக் காப்பாற்றினே; நான் கையாடிய ரெண்டு லட்சத்துக்குக் கணக்குக் காட்டும் தொல்லை இல்லே!

—சிவசக்தி.



''என்ன பெரியப்பா பிரிட்ஜ் ஆட்டத்தைக் கரைகண்டு விட்டீங்களா?'' என்றான்.

நான் உடனே பேச்சை மாற்றி சினிமா பற்றிப் பேசலானேன். தற்கால புதிய சினிமாவுக்குப் பத்திரிகையில் கிடைத்துள்ள அமோக வரவேற்பைப் பற்றிப் பிரசங்கித்தேன். ஒரு பிரபல நடிகனின் ஜகதலப் பிரதாபங்களைப் பிரகடனப்படுத்தி இந்தியாவில் இப்போது சினிமாதான் மிகப் பெரிய விஷயம் என்பது போல் பேசினேன். அன்று சாயங்காலமே சுசீலாவுடன் சினிமாவுக்குப் போய் வருமாறு அவனை வற்புறுத்தினேன்.

சீக்கிரமே மூர்த்திக்கு சினிமாப் பைத்தியம் பிடித்தது. சீட்டாட்டத்தை மெல்லக் கைவிட்டான். அவன் வீட்டுக்குப் போகும் போதெல்லாம் சுசீலாவுடன் கடைசியாகப் பார்த்த சினிமாவைப் பற்றியே பேசுவான். ஆரம்பத்தில் சுசீலாவும் நானும் ரகசியமாய் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துச் சிரித்துக் கொண்டோம். ஆனால் நாள் ஆக ஆக அவன் என்னைப் புறக்கணிக்கவே ஆரம்பித்து விட்டான்.

ஒரு நாள் மூர்த்தி ஆபீஸிலிருந்து திரும்புவதற்கு முன்னால் போய்ச் சேர்ந்தேன். சுசீலா அதிகம் பேசவில்லை. அவள் அழுது கொண்டிருந்தாள் என்று முகம் காட்டிக் கொடுத்தது. மெல்லப் பேச்சை ஆரம்பித்தேன்.

''போன வாரம் நீங்கள் பார்த்த சினிமா பற்றிச் சொன்னான் மூர்த்தி. ஹேமா மாலினி ரொம்ப அழகாய் இருந்தாளாம்...''

சுசீலா கையிலிருந்த டிரேயை ஓங்கி மேஜை மீது வைத்தாள். கண்ணாடி டம்ளர்களைக் கலகலவென்று அதில் அடுக்கினாள்.

அடுத்தாற்போல் என்ன சொல்வதென்று தெரியாமல் சும்மா இருந்தேன். சுசீலா டம்ளர்களில் காப்பியை ஊற்றினாள். அவள் கை நடுங்கிற்று. காபி மேஜை விரிப்பில் சிந்தியது. ''ஐ ஹேட் ஹேமா மாலினி'' என்று ஒரு கத்துக் கத்திவிட்டுச் சமையலறைக்குப் போய் விட்டாள்.

அப்போதுதான் எனக்கு உறைத்தது அவள் ஹேமா மாலினியைக் கண்டு பொறாமைப் பட்டாள் என்று. மூர்த்தி ஹேமாமாலினியின் உடற்கட்டையும், அழகையும் சதா வர்ணித்து, வர்ணித்துப் பூரித்துப் போவான். நான் இதையெல்லாம் அதிகம் பொருட்படுத்தவில்லை. யோசித்துப் பார்த்ததில் புரிந்தது அவன் எப்படி அந்த நடிகையின் உருவத்தைத் தன் மனத் திரையில் புகைப்படம் எடுத்து வைத்திருக்கிறான் என்று. அவளுக்காக ரசிகர் மன்றம் துவக்கப் போவதாய்ச்சொல்லிக் கொண்டிருந்தான். அவள் படத்தை பர்ஸுக்குள் வைத்திருந்தான்.

நான் செய்த முட்டாள்தனத்துக்காக என்னை நானே ஆயிரம் முறை திட்டிக் கொண்டேன். இனியேனும் அவனுடைய காரியங்களில் தலையிடாமல் என்பாட்டுக்கு இருக்க வேண்டும்.

அதற்குப் பிறகு அவர்கள் வீட்டுப் பக்கமே போகவில்லை.பல வாரங்கள் கழித்துத் தான் கிளப்புப் பக்கம் போகத் தைரியம் வந்தது.



### மின்மினி இன்பம்

ஜப்பானில், பல நகரப் பகுதிகளில் தொழிற்சாலைகள் வெளியேற்றும் அசுத்தங்களினால் மின்மினிப் பூச்சிகள் அழிந்து விட்டன.

ஜப்பானியர்கள் 'அதனால் என்ன' என்று அலட்சியப்படுத்தாமல், வருடா வருடம், ஒன்றேகால் லட்சம் ரூபாய் செலவில், மின்மினிப் பூச்சிகளை உற்பத்தி செய்து வளர்த்து, ஜூன் மாதத்தில் நகரப் பூங்காக்களில் பறக்க விடுகிறார்கள். —ஜெயா வி. ராமன்.

அங்கே... என்ன ஆச்சரியம்! என் கண்களை என்னால் நம்பவே முடியவில்லை. மூர்த்தி பிரிட்ஜ் விளையாடிக் கொண்டிருந்தான்... அவனுக்குப் பார்ட்னர்... சுசீலாவே தான்.

''ஹலோ பெரியப்பா!'' சீட்டில் இருந்து கண்களை எடுக்காமல் பேசினான் மூர்த்தி.

''ம்.... சுசீலாவுக்கு விளையாடத் தெரியுமா?'' என்று திணறினேன்.

''ஓ உங்களுக்குத் தெரியாதா?'' என்றான் அலட்சியமாக. ''எனக்குத் தெரியாமல் தான் கத்துண்டாள். இப்போ பிரமாதமா ஆடறா. நாங்க இரண்டு பேரும் சேர்ந்து விளையாடினா எவ்வளவு பொருத்தமா இருக்கு தெரியுமோ? இப்ப நாங்க சேர்ந்து ஒரு புத்தகம் வேற எழுதறோம். சுசீலா பெண்கள் பத்திரிகைக்கு ''பிரிட்ஜ் விளையாடும்போது பெண்கள் உள்ளுணர்வைப் பயன்படுத்துவது எப்படி'' என்று ஒரு கட்டுரைத் தொடர் எழுதிண்டிருக்கா.''

''நீங்க வீட்டுக்கு வந்து நாளாச்சே'' என்றாள் சுசீலா புன்சிரிப்புடன்.

''இந்த ஆட்டத்துக்குப் பிறகு சினிமா பார்க்கலாமா?'' என்று சக ஆட்டக்காரர் ஒருவர் கேட்டார். ''ரஜியா சுல்தானாவில் ஹேம மாலினி சக்கைப் போடு போட்டிருக்காளாம்.''

''ஆமாம், ஹேமா மாலினி யாருக்கு வேணும்?'' — மூர்த்தி சுசீலாவை ஆவலுடன் பார்த்தான்.

சுசீலாவின் கன்னங்கள் நாணிச் சிவந்தன. ''என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? உங்களுக்கு எப்பவுமே அவளைக் கண்டாப் பிடிக்காது. பெரியப்பாவைக் கேளுங்க... அவர்தான் அவளுடைய விசிறி... இல்லையா பெரியப்பா?'' — என் பக்கம் திரும்பி ஒரு விஷமப் பார்வை பார்த்தாள் சுசீலா.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: சீதா ரவி



லட்சுமிமோகன், நாகர்கோவில்-2

● நண்பர் ஜோ கடைகளிலும் பொது இடங்களிலும் சுறுசுறுப்புடன் இயங்கி உதவும் பணியாளர்களிடம் அவர்கள் பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, வீட்டிற்கு வந்ததும் முதல் காரியமாக 'ஒரு கஸ்டமர்' என்று கையெழுத்திட்டுப் பாராட்டுக் கடிதம் எழுதி விடுவார்.

எஸ். ராமச்சந்திரன், ராய்பூர்

● உறவுக்காரர் கல்யாணமாயிருந்தாலும் வரதட்சணை கொடுக்கவோ வாங்கவோ அங்கு உண்டு என்றுதெரிந்தால் அக்கல்யாணத்தில் கலந்து கொள்ள மாட்டார் என் நண்பர்.

புஷ்பா, கந்தஸ்வாமி, சென்னை-26

● வழக்கமாக குழந்தை கீழே விழுந்து அடிபட்டுக் கொண்டால் தாய்மார்கள் 'இந்த தரைதானே இடித்தது. அதை உதைத்து விடுகிறேன்' என்ற ரீதியில் பேசிக் குழந்தையைச் சமாதானப்படுத்துவார்கள். என் தோழி இவ்வாறு பழிவாங்கும்உணர்ச்சியைத் தூண்டி விடாமல் இயற்கை அழகையோ

## வாசகர் பங்கு

கொண்டு விடுவார் என் நண்பர். வேலையிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் இதைப் பின்பற்றலாம்.

பி. சீனிவாசன், வேலாயுதபாளையம்

● என் நண்பர் ஒருவர் திருமணங்களுக்குச் சென்றால் தன் மிதியடிகளில் ஒன்றை ஒரு பக்கமும் மற்றொன்றை வேறொரு பக்கமும் விட்டுச் செல்வார். இதனால் அவர் ஒரு தடவை கூட மிதியடிகளைத் தொலைத்தது கிடையாது.

மு. திருநாவுக்கரசு, வேலூர்-9

● மொபைல் போஸ்ட் ஆபீஸ் போல் எப்போதும் சில போஸ்ட் கார்டுகள், இன்லண்டுகள், ஸ்டாம்ப்புகள் வைத்திருப்பார் என் நண்பர். பல பேரின் அவசரத் தேவைக்கு இவருடைய நல்ல பழக்கம் உதவியுள்ளது.

இந்திராணி, நாகர்கோவில்-2

● சாதாரணமாக முப்பதுநாட்களில் எனக்கு சமையல் காஸ் தீர்ந்து விடும். என் தோழியின் ஸிலிண்டர் மட்டும் 45 நாட்களுக்கு





இ. எஸ். ஜவஹர், சேலம்-5

● கல்லூரியில் சேர அன்று நண்பருக்கு நேர்முகத் தேர்வு. கேட்கப்பட்ட கேள்விக்கு அவருக்குப் பதில் தெரியவில்லை. உடனே தெரியாது என்று ஒப்புக் கொண்டு, கேள்வி கேட்டவரிடமே பதிலைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அதை அப்பொழுதே புத்தகத்தில் குறித்தும் வைத்துக் கொண்டார். அவருக்கு அக்கல்லூரியில் இடம் கிடைத்து விட்டது.

எஸ். சீதாலக்ஷ்மி, சென்னை-31

● பத்திரிகைகளில் வெளியாகும் பயனுள்ள பொன்மொழிகளைக் கத்தரித்து ஒரு புத்தகத்தில் ஒட்டி வைத்துக் கொண்டால், மனச் சோர்வுற்ற நேரங்களில் படித்து ஆறுதல் பெறலாம் என்று என் நண்பர் கூறியபடி செய்து பயன் பெற்றுள்ளேன் யான்.

டி. கணேசன், திருநெல்வேலி

● விளம்பரங்களைப் பார்த்து வேலைக்கு விண்ணப்பம் செய்கையில், தன்னைவிட அதிக மதிப்பெண் பெற்ற நண்பர்களுக்குத் தெரிவித்துக் கட்டாயம் அதே வேலைக்கு விண்ணப்பம் செய்யச் சொல்வார் நண்பர் ரவி.

கடவுளேயோ காட்டிக் குழந்தையைச் சமாதானம் செய்கிறுள்.

**சி. புஷ்பா, கோவை-5**

● அலுவலகமாய்த் திட்டு வாங்கும்போது மௌனம் சாதித்துவிட்டு, வரும் அத்தனை கோபத்தையும் ஒரு டம்ளர் தண்ணீர் குடித்து அடக்கிவிடும் என் தோழியின் குணம் எனக்கு மிகவும் பிடிக்கும்.

**வித்யா நந்தகுமார், ஏரல்**

● என் தோழியின் வியப்பூட்டும்பழக்கம்; தன்னைக் கேலி செய்யும் ஆண் பிள்ளைகளிடம் நேராகச்சென்று ''அண்ணா உங்கள் வீட்டில் அம்மா, அக்கா, தங்கை எல்லோரும் நலம்தானே'' என்று கேட்டு அவர்களை வாயடைத்துப் போகச் செய்து விடுவாள்.

**டி. என். கிருஷ்ணமூர்த்தி, சென்னை-28**

● தான் வசிக்கும் தெரு முனையில் உள்ள நாற்சந்தியில் காலை வேளையில் நின்று கொண்டு பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளின் புத்தகச் சுமையைத் தாம் எடுத்துக் கொண்டு அவர்களைப்பத்திரமாகப் பள்ளியில்





நீடிப்பதன் ரகசியம் என்ன என்று தெரிக்கதும் நானும் அதைப் பின்பற்ற ஆரம்பித்தேன். சமையலைத்தொடங்கும்முன் காய்கறிகளை நறுக்கி, அரைக்க வேண்டியவைவற்றை அரைத்து, புளிகரைத்து, எல்லாவற்றையும் தயார் செய்து கொண்ட பிறகே அடுப்பைப் பற்ற வைப்பான்.

**பட்டு, டோம்பிவிலி மேற்கு**

● என் நெருங்கிய விமலா ராஜாமணி, தான் ரேஷன் க்யூவில் நிற்கையில் தனக்குப் பின்னால் கைக்குழந்தையுடன் பெண்கள் யாராவது நின்றிருந்தால், தன் இடத்தை அவர்களுக்குக் கொடுத்துவிட்டு, தான் பின்னால் போய் விடுவாள்.

**பாலு மணிசேகர், காங்கேயம்**

● திருமண வீட்டிலோ, வேறு விருந்திலோ சாப்பிட்டால் சமையல் செய்தவரைத் தேடிச் சென்று பாராட்டும் நற்குணம் நண்பர் கார்த்திகேயனுக்கு உண்டு. ஒரு முறை அவர் அவ்வாறு செய்யும்போது உடனிருந்த நான் அந்தச் சமையற்காரரின் முகத்தில் ததும்பிய மகிழ்ச்சியைப் பார்த்த பிறகு, நானும் இந்த நல்ல பழக்கத்தை மேற்கொண்டேன்.

சற்றும் போட்டி மனப்பான்மை இல்லாத வித்தியாசமான குணம்.

**ராதிகா சுப்ரமணியன், திருச்சி-5**

● யார் விருந்துக்குக் கூப்பிட்டாலும் வெறுமனே சாப்பிட்டுவிட்டு வராமல் அவர்களுக்குச் சமையல் மற்றும் பரிமாறுவதில் உதவி நல்ல பெயர் பெறுவதே என் தோழியிடம் உள்ள நல்ல பழக்கம்.

**ஆர். ராஜன், ஸ்ரீவில்லிப்புத்தூர்**

● பெண்களைப் பார்க்கும்போதெல்லாம்'ஓம் சக்தி' என்று மெள்ளக் கூறுவான் நண்பன். குழப்பமான எண்ணங்களைத் தவிர்த்து மன அமைதி காப்பதே அதன் நோக்கம்.

**ஜெயா வெங்கட்ராமன், ஹைதராபாத்-32**

● பிரார்த்தனை ஏதேனும் செய்துகொண்டால் தேங்காய் உடைப்பதாகவோ, அர்ச்சனை செய்வதாகவோ வேண்டிக் கொள்ள மாட்டாள் என் தோழி. சாம்பார் சாதமோ புளியோ தரையோ கலந்து எடுத்துப் போய்க் கோயில் அருகே உள்ள பிச்சைக்காரர்களுக்கு விநியோகித்து விடுவாள்.



### ஆர். சீனுவாசன், திருக்கோவிலூர்

● தன் உறவினர்கள் எல்லோரும் ஷெட்யூல்ட் காஸ்ட் சான்றிதழ் பெற்றுச் சலுகைகள் பெறும்போது தான் மட்டும் அவ்வாறு செய்யாமல் 'என்னைப் படைத்த ஆண்டவன் எனக்கு வழி காட்டுவான்' என்று நம்பிக்கையுடன் கூறும் நண்பரின் நல்ல பழக்கம் வித்தியாசமானது.

### இ. அமரேசன், புதுபம்பாய்

● பம்பாயில் சுபாஷ் நகரில் நகரசபை நட்டு வைத்த 25 மரங்களுக்குத் தண்ணீர் ஊற்றி வளர்த்தார் என் நண்பர். இன்று அவை நிழல் தரும் மரங்களாய்ப் பரிமளிக்கின்றன.

### திருமதி தேவனாதன், மதுரை-3

● தினமும் ஆங்கில அகராதியிலிருந்து பத்து புதிய வார்த்தைகளை எடுத்து அர்த்தத்துடன் எழுதி வைத்துக் கொண்டு தன் ஆங்கிலப் புலமையை வளப்படுத்திக்கொண்டிருக்கிறாள் என் தோழி.

### பானுமதி திருஞானம், சென்னை-54

● என் தோழியின் கணவர் தான் தவறு செய்து விட்டால் மனைவியிடம் மன்னிப்புக் கேட்கும் பண்பான குணமுடையவர். இதைப் பலரும் பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிறேன்.

### கே. என். மீனாள், சென்னை

● எனது பள்ளிக் காலத் தோழி தினம் தவறாமல் செய்தித்தாள் படிப்பாள். அன்றைய செய்தியில் யாரேனும் விபத்தில் துர்மரணம் அடைந்ததாகக் குறிப்பிட்டிருந்தால் அவருக்காக விளக்கேற்றிப்பிரார்த்தனை செய்வாள். பள்ளிப் பருவம் முதலே இதைச் செய்து வருகிறாள்.

### என். பாலசுப்பிரமணியன், சிதம்பரம்

● தினமும் காலையில் காப்பி பருகும் முன் ஒரு டம்ளர் குளிர்ந்த நீர் பருகுவார் என் நண்பர். இது காப்பியின் வீரியத்தைக் குறைத்து அல்சர் முதலிய வியாதிகள் வராமல் தடுக்கலாம் என்கிறார்.

### அன்னபூரணி சங்கர்; திருச்சி-14

● ஒவ்வொரு முறை என் தோழி வீட்டுக்குச் செல்லும்போதும் அங்கு கரும்பலகையில் ஒரு பிரார்த்தனை வாசகத்தையோ, பொன்மொழியையோ எழுதி வைத்திருப்பதைப் பார்த்து மகிழ்வேன். தினம் தினம் புதிதாய்ச் சிந்திக்க வைக்கும் இப்பழக்கத்தை எல்லோரும் பின்பற்றினால் என்ன?

### ஐ. எஸ். மதிவாணன் எடையூர்

● ஒவ்வொரு வருடமும் ரத்த வங்கியில் இலவச ரத்த தானம் செய்து நூதன முறையில் பிறந்தநாள் கொண்டாடுகிறான் நண்பன். எல்லோரும் இதைச் செய்தால் வீண் ஆடம்பரச் செலவு குறையும். மனத் திருப்தியும் கிடைக்கும்.

### ஜெ. லதா, சென்னை-87

● என் தோழிக்குப் பார்வையற்ற மாணவர்களுக்குத் தேர்வு எழுதும் பழக்கமுண்டு. அவர்கள் அருகே அமர்ந்து அவர்கள் சொல்லும் பதில்களை மூன்று மணி நேரங்களுக்குப் பொறுமையுடன் எழுதும் அவள் பெயர் அன்புமொழி. நல்ல பெயர்ப் பொருத்தம் தானே;

### ஏ. முத்துக்குமார், சிதம்பரம்

● ரேடியோ, டேப் ரிகார்டர், டி. வி. இவற்றை மிகமிக மென்மையாக, மற்றவருக்குத் தொந்தரவின்றிக் கேட்டு ரசிக்கும் பழக்கம்.

### அ. வசந்தா, செலவடை (சேலம்)

● எனது பள்ளித் தலைமை ஆசிரியர் இறுதித் தேர்வில் வெற்றி பெற்ற மாணவ மாணவியர் எல்லோரையும் வீடு தேடிச் சென்று பாராட்டும் நல்ல பழக்கம் உடையவர்.

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

எஸ். ராமச்சந்திரன்
ராவல் நிவாஸ்,
டாங்க் காலனி,
ஃபாஃபாதி, ராய்பூர்-492 009

---

துணுக்குகளை வெளியிட்டு முதன் முதலில் சாதனை புரிந்த வார இதழ்: டிட்பிட்ஸ். 103 வருடங்களாக பிரிட்டனிலிருந்து வெளிவந்த இந்த இதழ் சமீபத்தில் மூடுவிழா நடத்தியுள்ளது. ஒரு மில்லியன் இதழ்களுக்கும் அதிகமாக விற்று சாதனை புரிந்த இந்த இதழ்; தொழிலாளர் வேலை நிறுத்தத்தாலும் பெருத்த நஷ்டம் ஏற்பட்டுள்ளதாலும் மூடப்படுவதாக அறிவித்துள்ளது.

ஆதாரம்: ஹிந்து. தகவல்: ராஜேஸ்வரி.



# அம்மா, என்ன சுகம்!

ஜெயந்தன்

எதிரே யாரோ வந்து நிற்கவும் லெட்ஜரிலிருந்து தலைநிமிர்ந்தார் மாணிக்க வாசகம். பார்வையைக் குழப்பிய வெள்ளெழுத்துக் கண்ணாடியைக் கழற்றிவிட்டுப் பார்த்தார்.

உயரமாய், அகலமாய் வெராஜன் நின்று கொண்டிருந்தான்.

''வா... வா... ஒக்காரு.'' ..

அருகில் உயர்தர .எடிகொலான் வாசனை சூழ அமர்ந்த வெராஜன், காதோரம் கிசுகிசுத்தான்.

''நாளைக்குச் சாயங்காலம் ஆறரை மணிக்கு அரேன்ஜ் பண்ணியிருக்கேன். ஒன் அவர். தர்ட்டி ருபீஸ். வந்துரு...''

''என்னது?''

''ஆதாம்பா... ப்ளு பிலிம். எத்தனை நாளாக் கேட்டுக்கிட்டு இருந்தே? இப்பத்தான் முடிஞ்சது. இப்பல்லாம் போலீஸ் ரொம்ப ஸ்ட்ரிக்டா இருக்கானுக. கேஸட் கெடைக்கறதே ரொம்பக் கஷ்டமாயிருக்கு.''

அடிவயிற்றிலிருந்து 'குபுக்'கென்று ஏதோ எழுந்து தொண்டைக் குழியை அடைத்தது.

சன்னமாய் உதறத்தொடங்கிய கைகளால் பர்ஸை எடுத்துப் பணத்தை நீட்டினார்.



''போலீஸ், கீலீஸ் வந்துற மாட்டாங்களே?'' குரல் நடுங்கிற்று.

''ஒரு பயலுக்குத் தெரியாது. அட்ரஸை எழுதிக்கோ. சைலண்டா ஆறரைக்கு வந்துரு... நாளைக்குச் சாயங்காலம்... கவனம்...''

அலட்சியமாய்ச் சொல்லிக் கொண்டே போனான் சிவராஜன்.

யாராவது கவனிக்கிறார்களா என்று ஒரு குற்ற உணர்வுடன் சுற்றும்முற்றும் பார்த்தார் மாணிக்கவாசகம்.

யாரும் கவனிக்கவில்லை.

பெருமூச்சுடன் லெட்ஜரைப் புரட்டினார்.

இதயம் 'படக் படக்'கென்று பெரிதாய்ச் சத்தமிட்டது.

வெகுநாட்களாய் நெஞ்சில் கூடுகட்டி விட்ட ஆசை. வெளியிலும் சொல்ல முடியாமல், பிறரோடு தாராளமாய்ப் பங்கிட்டுக் கொள்ளவும் முடியாமல், மனதுள் புரையோடிக் கொண்டிருந்த ஆசை. சாதுவான, சாத்வீகமான மனிதர். இன்னும் ஐந்தாண்டுகள் ஜாக்கிரதையாக வேலைபார்த்துவிட்டால், மாலை, மரியாதை, மொமெண்டோவுடன் கௌரவமாக ஓய்வு பெற்றுவிடலாம். இன்னும் ஐந்தாண்டுகள். இதுநாள் வரை கட்டிக்காத்து வந்த இமேஜைப் பாதுகாத்துவிட்டாலே போதும்...

இந்த நேரத்தில் தான் இப்படி ஒரு விபரீத ஆசை.

ஒருநாள், யாருடனோ யதேச்சையாகப் பேசிக் கொண்டிருக்க போது, அவரையறியாமல், பேச்சு ப்ளூபிலிம் பற்றித் திரும்ப, அவர் தாம் 'பார்த்து ரசித்த படங்களை வரிசைப்படுத்தி, 'ஆயிரம் தான் சொல்லு. மாணிக்கவாசகம் அம்பிளையாய்ப்பொறந்து ஒருவாட்டியாவது ப்ளூ பிலிம் பாக்கலேன்னு அவன் எதுக்கும் லாயக்கில்லே'' என்று சொல்லி ''நீ பார்த்திருக்கியோ?'' என்று கேட்டதும், 'சேச்சே... அதெல்லாம் தப்பு.. ஊஹூம்'' என்று சூர்க்கமாய்த் தலையசைத்தவரைப் பார்த்த நண்பர் ''ஐ பிடி யூ... யூ ஹேவ் மிஸ்ட் ஸம் க்ரேட் என்ஜாய்மெண்ட்'' என்று அனுதாபத்துடன் சொன்னாரே, அப்போது அவர்மனத்தில் புகுந்தது அந்த ஆசை.

இந்தியாவில்...

ஜாதி ஒழிப்புக் கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவு:

உறுப்பினராய் உள்ள பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் 'சந்தா' தர வேண்டியதில்லை.

—ஜா. ரவி.




இதுநாள் வரை கட்டிக் காத்து வந்த இமேஜ், வாய்விட்டு யாரையும் கேட்கவிடாமல் தடுத்தது. எப்படிச் சமாளிப்பது என்று மனத்துக்குள் குமைந்து கொண்டிருந்த போது தான் சிவராஜன் ஞாபகம் வந்தது.

சிவராஜன் ஓர் உல்லாச புருஷன். செய்கிறதைப் பிரகடனப்படுத்திவிட்டுச்செய்கிறவன். கையில் மோதிரம் மாதிரி, எப்போதும் சிகரெட். முதல் நாள் இரவு, 'சோனா'வில் நண்பர்களுடன் விஸ்கி சாப்பிட்ட அனுபவத்தை உரக்கச் சொல்லிக் கொண்டிருப்பான். சம வயதுக்காரன்தான் என்றாலும், அவனோடு அளந்து நிறுத்தித் தான் பேசுவார் மாணிக்கவாசகம். அலுவலக விசாரணைகள் தவிர மற்ற விஷயங்களை அவனிடம் பகிர்ந்து கொள்ளாமல் ஓர் இடைவெளியை வைத்துக் கொண்டிருந்தாலும், நண்பன் என்ற உரிமையை விட்டு விடாமல் இருந்தார்.

சிவராஜன் இந்த விஷயங்களில் கிங்கக் குட்டி. அவனிடம் கேட்டால் என்ன?

உற்சாகம் குமிழியிட அவனிடம் சென்றார். விஷயத்தைப் பக்குவமாய்ச்சொன்னார். பேசுகிற போதே உடல் விருட்டென்று சில்லென்றிறு பூச்சியாய்க் குறுகிப் போய் விட்டது மாதிரி உணர்ந்து கொண்டே சொன்னார்.

''....எனக்குப் புரியுது மாணிக்கவாசகம். நான் ஏற்பாடு பண்றேன் கவலைப்படாதே... இதெல்லாம் மனசைப் பொறுத்த விஷயம். பாவம், புண்ணியம்கறது அபத்தம். மனசுக்குச் சரின்னு தோணிச்சுன்னு தாராளமாய்ப் பார்க்கலாம்...''

உலர்ந்து போன தொண்டையில் மீண்டும் மிடறு விழுங்கினார் மாணிக்கவாசகம்.

''நம்ம ஆபீஸிலே ஒருத்தருக்கும் தெரியாமெப் பார்த்துக்சணும்...'' குரல் ஹீனமாய் ஒலித்தது.

பெரிதாய்ச் சிரித்தான் சிவராஜன்.

''புரியுது. கவலையே படாதே. நம்ம ஆபீஸிலேருந்து ஒருத்தரையும் நீ பாக்குற அன்னைக்குக் கூப்பிட மாட்டேன்.... போதுமா? கவலைப்படாமப் போ... ஏற்பாடு பண்ணிட்டுச் சொல்றேன்...''

சிவராஜன் சொன்னதைச் செய்துவிட்டான்.

நாளைக்கு மாலை ஆறரை மணிக்கு அவர் ஆவல் நிறைவேறப் போகிறது.

நெஞ்சு படபடத்தது.

'இந்த ஒரு தடவைதான். இனிமே நெனைச்சுக் கூடப் பார்க்க மாட்டேன். இதுதான் பர்ஸ்ட் அண்ட் த லாஸ்ட்...'

தமக்குத்தாமே சொல்லிக் கொண்டு தலையைப் பெரிதாய் ஆட்டிக்கொண்டார்.

''**கோ**மதி... இன்னைக்குச் சாயங்காலம் ஆபீஸிலே ஆடிட் வேலை இருக்குது. வர லேட்டாகும்...''

''இன்னைக்குப் பெரியக்கா சம்பந்திக்கு அறுபதுக்கறுபது கல்யாணம், போய் விசாரிக்கணும்னு சொன்னீங்களே...'' புடவைத் தலைப்பால் கைகளைத் துடைத்துக் கொண்டே அருகே வந்தாள் கோமதி.

'இது வேறு? எல்லாம் இன்றைக்கென்று தான் வந்து தொலைக்கும். நான் போய் விசாரிக்காவிட்டால் அறுபது வயதுஆகாமல் போய் விடுமோ?'

''ஆபீஸ்லே வேலை இருக்குங்கறேன். நீ பாட்லே அறுபது எழுபதுங்கறியே?... ஏதாச்சும் புத்தியிருக்கா ஒனக்கு...? நீ மட்டும் போயிட்டு வா...'' கன்னென்று எரிந்து விழுந்தார்.

''இப்ப என்ன சொல்லிப்புட்டேன்னு இப்பிடிக் கோவிச்சுக்கிறீக?... என்னமோ தெரியல்லே. நேத்து ஆபீஸ்லேர்ந்து வந்ததி லேர்ந்தே எப்படியோ இருக்கிக... குட்டி போட்ட பூனையாட்டம் தவிச்சுக்கிட்டு இருக்கிக. நானும் பார்த்துக்கிட்டுத்தான் இருக்கேன். ஞாபகப் படுத்துவம்னு சொன்னேன். எனக்கென்ன வந்திச்சு? நீங்க வரல்லென்னு நானும் போகல்லே...'' கவியத் தொடங்கிய சன்னசாலை இமைத்துக்கொண்டே உள்ளே போனாள் கோமதி.

'நேற்று மாலையிலிருந்தே நீங்கள் சரியாக இல்லை' என்று மனைவி சொன்னதும் தூக்கி வாரிப்போட்டது.




கும்பகோணம் கிராமிய மின்சாரக் கூட்டுறவு சங்கத்தின் சுவாமிமலை கிளை அலுவலகத்தில் கீழ்க்கண்ட பொ(ன்)ன் மொழிகள் எழுதி வைக்கப்பட்டுள்ளன.

'கையுறைநம்பினோர் கைவிடப்படார்.''

'இடுப்புக்கயிறே இணையற்ற நண்பன்.''

'எர்த் ராடு எமனையும் வெல்லும்!.

—எஸ். ரகுநாதன்.

சரியாக மணி ஆறரை.

முன்பின் வந்திராத அந்தப் பகுதியில் வீட்டு எண்ணைக் கண்டுபிடித்து, அழைப்பு மணியை அழுத்தினார்.

''வா, மாணிக்கவாசகம்... ஏது மஃப்ளர் எல்லாம், கழுத்திலே சுத்திக்கிட்டு வெய்யக் காலத்திலே...?'' என்று வரவேற்றான் சிவராஜன்.

''சும்மா... தொண்டை ஒரு மாதிரியா இருந்துச்சு. அதான்'' என்று தலையிலிருந்து மஃப்ளரைப் பிரித்துக் கழுத்தில் சுற்றிக் கொண்டே உள்ளே நுழைந்தார். இதமான காற்று மயிர்க்கற்றையினுள் புகுந்து வியர்வை வெப்பத்தைத் தணித்தது.

பெரிய ஹால். நடுவில் சுவரோரமாய் டெலிவிஷன் அருகிலேயே வீடியோ டெக். எதிரில் வரிசைக்கு நாலைந்து நாற்காலிகளாய் ஐந்து வரிசை போட்டிருந்தார்கள்.

'சரிதான். ஃபிலிம்ஷோ மாதிரி நடத்துறாங்க போலிருக்கு' என்று எண்ணிக்கொண்டார். கடைசி வரிசையில் சற்று இருட்டான மூலையில் அமர்ந்து கொண்டார். யார், யாரோ வந்தார்கள்.

''ஆரம்பிச்சுடுவோமா சிவா? இன்னும் மூணு பேர்தானே பாக்கி? வந்து ஜாயின் பண்ணிக்கிடட்டும். மணி ஏழாகுதே'' என்று கரகரத்த குரலில் வீட்டுச் சொந்தக்காரன் கேட்கவும் சிவராஜன் விளக்கை அணைத்துவிட்டு 'டெக்'கில் ஏதேதோ பொத்தான்களைத் அழுத்தினான்.

சன்னமாய் இருட்போர்வை அறையெங்கும் பரவ... திரையில் வண்ணப்படம் தொடங்கிற்று.

...கடைத்தெருவில் கார் ஒன்று நுழைகிறது. ஒரு ஹோட்டல் வாயிலில் நிற்கிறது. அதிலிருந்து இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும் இறங்குகிறார்கள். இரண்டுஆண்களும், அந்தப் பெண்ணின் இடுப்பில் கையால் தழுவி உள்ளே அழைத்துப்போகிறார்கள். அவள் ஏதோ சொல்ல, இருவரும் பெரிதாய்ச் சிரிக்கிறார்கள்...

மூச்சைப் பிடித்துக் கொண்டு பார்க்கலானார் மாணிக்கவாசகம்.

இருட்டில் யாரோ தட்டுத்தடுமாறிக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள்.

''அடேடே வா மூர்த்தி. ஏது இவ்வளவு நேரம்? ஆறரைக்குன்னு சொல்லலியே?''... என்று வீட்டுக்காரன் சொல்லவும் உள்ளே வந்தவன் தணிந்த குரலில் ஏதோ பதில் சொன்னான். அந்த இருட்டில் வந்தது யார் என்று பார்த்தார் மாணிக்கவாசகம். பின்புறம்தான் தெரிந்தது.

நல்ல உயரமாய், வாட்டசாட்டமாய், மூக்குக் கண்ணாடியுடன்...மாப்பிள்ளை இல்லையோ? நம் மகள் சாரதாவின் கணவன் மூர்த்தியில்லையோ?

சப்த நாடியும் ஒடுங்கிப் போயிற்று. உச்சந்தலையிலிருந்து நெருப்பு வெள்ளம் உடம்பெல்லாம் ஊர்ந்து நெளிந்தது மாதிரி இருந்தது.

'சடையிலே போயும் போயும் மாப்பிள்ளை யிடமா மாட்டிக் கொள்ள வேண்டும்? தாய், தகப்பன் இல்லாத பையன். என்னைத் தகப்பனாராய் மதித்து நமஸ்கரிப்பவன். என் மீது அபார மதிப்பு வைத்திருப்பவன். அவன் முன்னால் இப்படி ப்ளூ பிலிம் பார்த்து... ஐயோ புத்தி ஏன் இப்படிப் போயிற்று? என் வயதுக்குச் செய்கிற காரியமா இது?' வெடவெடத்து நொறுங்கிக் கொண்டிருந்தார்.

'மாப்பிள்ளை பார்த்திருப்பானோ? பார்த்திருப்பான். கட்டாயம் பார்த்திருப்பான். அதான் நீர்க்கமாய் நான் இருக்கும் இடம் வரை பார்வையைச் சுழற்றினானே? ஐயோ, என்னைப் பற்றி என்ன நினைப்பான்? 'ப்ளூ பிலிம் பார்க்குறாருடி' என்று சரகவிடம் சொல்லுவானோ? சொல்வான். கட்டாயம் சொல்வான். அவள் என்ன செய்வாள்? அம்மாவிடம் வந்து சொல்வாளோ? கட்டாயம் புலம்புவாள். கோமதிக்குத் தெரிந்தால் என்ன ஆகும்?

உருகிப் போனார்.

திரையில் ஏதோ படம் ஓடிற்று. பெண்ணும், ஆணுமாய்...

ஒன்றும் பார்வையில் தங்கவில்லை. வியர்வை வெள்ளமாய்ப் பொங்கிற்று.

ஒரு தீர்மானத்துக்கு வந்தவராய் விருட்டென்று எழுந்தார். கடைசி வரிசையில் உட்கார்ந்தது சௌகரியமாய்ப் போயிற்று. விறுவிறுவென்று வெளியே வந்தார்.

''என்ன மாணிக்கவாசகம்...'' என்று கேட்ட சிவராஜனைத் திரும்பிக் கூடப்பார்க்காமல் ஓட்டமாய் ஓடி வீட்டுக்கு வெளியே வந்தார். அகப்பட்ட ஆட்டோரிக்ஷாவில் ஏறிக் கொண்டார். ஒரு உறுமலுடன் அது வீட்டுக்குப் பறந்தது.

''ஏங்க. ஒரு மாதிரி இருக்கீங்க?... ஒடம்புகிடம்பு சரியில்லியா...நேத்து ராத்திரி கூட சாப்பிடாமெப் படுத்துக்கிட்டீங்களே?'' முகத்தில் கவலை இழைய நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள் கோமதி.

''கொஞ்சம் டயர்டா இருக்கு. ரெஸ்ட் எடுத்தாச் சரியாப் போயிடும்... நீ போய் வேலையைப் பாரு...''

வாயிலில் ஏதோ நிழலாடவும் நிமிர்ந்து பார்த்தார்.

பேரன் கார்த்திக் தான் வந்து கொண்டிருந்தான். பின்னால் சரசுவும் மாப்பிள்ளை மூர்த்தியும் வந்து கொண்டிருந்தார்கள்.

அடிவயிறு குபீரென்று குலுங்கிற்று. மாப்பிள்ளையைப் பார்த்ததும் உயிரோட்டமே நின்று போயிற்று.

'எல்லாவற்றையும் சரசுவிடம் சொல்லி விருப்பான். அவள் கோமதியிடம் சொல்லி, எல்லோரும் புழுவைப் பார்க்கிற மாதிரிப் பார்க்கப் போகிறார்கள். ஆண்டவனே பட்டென்று இப்படியே உயிர் போய்விடக் கூடாதா?'

''தாத்தா'' என்று காலைக் கட்டிக் கொண்ட பேரனைத் தொடக் கூடத் திராணியில்லாதவராய்த் தலையைக் குனிந்து நின்று கொண்டிருந்தார்.

''வா... சரசு... வாங்க மாப்பிள்ளை'' என்று வாய் நிறைய அழைத்தவண்ணம் உள்ளிருந்து வந்தாள் கோமதி.

''ஏம்மா, நேத்தைக்கு நீயும் அப்பாவும் அறுபதாங் கல்யாணத்துக்கு வரல்லே? பெரியம்மா ரொம்பக் கோவிச்சுக்கிட்டாங்க. ராத்திரி ஒன்பது மணி வரைக்கும் நானும் மாப்பிள்ளையும் உங்களுக்காகக் காத்துக்கிட்டு இருந்தோம். கார்த்திக் கூட தாத்தா எங்கே, தாத்தா எங்கே'ன்னு கேட்டுக்கிட்டே இருந்தான். அப்பாக்கு ஒடம்புதான் சரியில்லியோன்னு கவலையாய்ப் போச்சு. அதான் காலங்கார்த்தாலே ஓடியாந்தோம்.. நேத்திக்கு இவரு திருத்தணிக்குப் போய் சாமி தரிசனம் பண்ணிட்டுச் சாயங்காலம் தான் வந்தாரு. பிரசாதத்தைக் கொடுத்துடலாம்னு நேத்திக்குச் சாயங்காலத்திலேர்ந்து கல்யாண வீட்டிலே காத்துக்கிட்டு இருந்தோம். நீங்க வரவேயில்லே...''

கவலையும், பரிவும், பாசமும் குரலில் இழைய சரசு சொல்லிக் கொண்டிருந்தாள். நெற்றியில் திருநீறும் நடுவில் மாணிக்கச் சிவப்பில் குங்குமப் பொட்டுமாய் மாப்பிள்ளை மூர்த்தி. ராஜலட்சணம் முகத்தில் பிரகாசிக்கப் புன்முறுவலுடன் ஆமோதித்துக் கொண்டிருந்தான்.

'நேத்தைக்கு அங்கே பார்த்தது மாப்பிள்ளை மூர்த்தியில்லியா?... வேறே யாரோ மூர்த்தியா...? அசப்பில் மாப்பிள்ளை மாதிரி இருந்த யாரோ ஒருத்தனா?... அம்மா.... அம்மம்மா....'

மனத்திலிருந்து ஏதேதோ பாரங்கள் பனிச் சென்று இறங்கி, இதயம் லேசாகிப் போயிற்று. தலையின் மீதிருந்து அவரை அழுத்திக் கொண்டிருந்த பெரிய முள் கிரீடம் எங்கேயோ எகிறிப் போய் விழுந்தது. சடார், சடாரென்று மனத்தின் ஏராளமான ஜன்னல் கதவுகள் திறந்து கொண்டன. போட்டி போட்டுக் கொண்டு காற்றும் வெளிச்சமும் உள்ளே பாய்ந்தன. பொல பொலவென்று கண்ணீர், வெந்நீர் வெள்ளமாய்ப் பொங்கிற்று. மனத்தின் அழுக்குகளும், அவலங்களும் கரைந்து வெளியேறின. உடம்பின், மனத்தின் சோர்வுகள்மறைந்து, உற்சாகம்கிளர்ந்தது.

காலில் ஒட்டிக் கொண்டிருந்த பேரன் கார்த்திக்கை வாரியெடுத்துக் கொண்டார். இறுக அணைத்துக் கன்னம், மூக்கு, கண் என்று அகப்பட்ட இடமெல்லாம் உதடுகள் வலிக்கும் வண்ணம் பதியப் பதிய முத்தமிட்டார்.

தேவ சுகமொன்று அலையலையாய் மேனியெங்கும் பாய்ந்து பரவி, மயிர்க்கால்கள் வழியே உள்ளே இறங்கி, ஒரு பேரின்பப் பிரவாகத்துள் ஆழ்த்திற்று.

''ஒங்கப்பாவுக்குக் கார்த்திக்கைப் பார்க்கல்லியேன்னு ஏக்கம். நேத்தைக்கு ஆபீஸிலே ஆடிட்னு எனவு எடுத்துட்டான். ராத்திரியெல்லாம் எதையோ பறி கொடுத்தது மாதிரி இருந்தாக. காலையிலே பேரனைப் பார்த்ததும் எல்லாம் சரியாயிடுச்சி...''

முகம் மலரப் பேசிக் கொண்டே சரசுவுடன் உள்ளே போனாள் கோமதி.

''என் கண்ணு... ராஜா...'' என்று பேரனைக் கொஞ்சிக் கொண்டிருந்தார் மாணிக்கவாசகம்.

---



ஹைதராபாத்தில் மேதக் மாவட்டத்தில் ஒரு ஜில்லா பரிஷத் பள்ளி கடந்த 15 ஆண்டுகளாக ஒரு சாதனையைச் செய்து வருகிறது. இந்த 15 வருடங்களில் பள்ளியிறுதி வகுப்பில் இந்தப் பள்ளி மாணவன் ஒருவன் கூடத் தேறவில்லை.

ஆதாரம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா. வி. கோபிநாத்.

# தலைவலி பலவகை உண்டு





# சிகிச்சை ஒன்றே ஒன்று !

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co.Ltd.

GM-1-83 TM



**29**

அனுராதாரமணன்

இத்தனை வருட அனுபவத்தில், இப்படியொரு சம்பவத்தை, சந்தித்ததே இல்லை பரந்தாமன். அதுவும் அவர் வீட்டிலேயே... அவருடைய காவலிலேயே...

இப்படிக் கூட நடக்குமா... நடக்க முடியுமா... என்னமோ, மந்திர ஜாலக் கதைகளில் வருவது போலல்லவா நடந்து விட்டிருக்கிறது...

இத்தனை காவலையும் மீறி, உயிர் பிரிந்து பல மணி நேரங்களாகப் பனிக்கட்டியின் மீது வைத்திருந்ததால், கனம் ஏறியிருந்த உடலை— ஒருவனால், எப்படிக் கண்மூடித் திறக்கும் முன் தூக்கிச் செல்லமுடியும்?

'இது எப்படிச் சாத்தியமாயிற்று...'

'இது எப்படி, இத்தனை சுலபமாய் ஏமாந்தோம்...?'

பங்களாவின் பின்புறக் கதவு திறந்து கிடக்கிறது. காம்பவுண்டுச் சுவர் வரையில், தோளில் சுமையுடன், ஒருவன், மண்ணில் பாதங்களை அழுந்த ஊன்றி நடந்த அடிச்சுவடு தெரிகிறது...

அதற்குப் பின்...



காம்பவுண்டுச் சுவரை ஒட்டினாற்போல — ஒரு வேன் நின்றிருந்த அடையாளம் இருக்கிறது...

வீட்டிலிருந்து புறப்பட்ட வேன் – மண் தரையில் தன் டயர் சுவட்டைப் பதித்து, பிறகு தார் ரோட்டில் சில கிலோ மீட்டர்கள் வரையில் ஓடி...

ஒரே சமயத்தில் – சென்னையிலுள்ள அத்தனை இடுகாட்டிலும் போலீஸ் தன் தேடலைத் தொடங்கி...

ஒரு விதிக்காக...

ஒவ்வொரு சுடுகாட்டிலும், பாதி எரிந்து கொண்டிருந்த அத்தனை இறந்த உடல்களும், தாங்கள் சாம்பலாகிக் கொண்டிருக்

றெ அவசரத்திலும், தங்களை அடையாளம் காண்பிக்க வேண்டிய பரிதாப நிலைக்கு உள்ளாகி...

இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் — விடிவதற்குள் எரிப்பதற்காக வந்த உடல்கள் எத்தனை என்று கணக்கெடுத்து...

கடைசியில் கண்டுபிடித்தபோது...

சென்னையைத் தாண்டி, ஒரு ஒதுக்குப் புறமாய் இருந்த இடுகாட்டில்... விழி எரிந்து கொண்டிருந்தான்.

இழுத்து விட்ட அறையில் பொறி கலங்கிப் போய் விட்ட இடுகாட்டுக் காவலாளி, கன்னத்தை ஒரு முறை கையால் தடவிய படிச் சொல்கிறான்.

''ராத்திரி நேரத்துல எரிக்கறது இல் லீங்க... பொழுது விடியணும்னு சொன் னேங்க... அவங்கதான் கேட்கலே...''

''அவங்கதான்னு... எவங்க..?''

''பொணத்தோட வந்தவங்க...''

''எத்தனை பேர்...''

''அஞ்சாறு பேர் இருப்பாங்க... அதுல ஒருத்தர், உசரமா, தாடியோட இருந் தாரு... அவர்தான் இதோட புருஷன்னு சொல்லிக்கிட்டாங்க...''

''நீ எப்படிடா உள்ளே நுழைய விட்டே... அஞ்சாறு பேரோட, சந்தேக மான முறையில வர்ற எந்தப் பொணத்தை யும், போலீஸோட அனுமதி இல்லாம எரிக்க விடக் கூடாதுன்னு தெரியுமில்லே..''

''தெரியும்...''

''அப்புறம் என்ன...''

''நான் பொழுது விடியட்டும்னு சொன் னேங்க... 'ஏற்கெனவே ஆஸ்பத்திரியில, செத்தவுடனே பாடியத் தராம, மார்ச்சுவரி யிலப் போட்டு வச்சுட்டாங்க... எத்த னையோ கெஞ்சி; நேத்து சாயந்திரம் தான் தந்தாங்க.. அதுக்கு மேல உறவுமுறையெல் லாம் கூடி, ஒப்பாரி வச்சதுலே ரொம்ப நேரமாச்சுது'ன்னும், 'இந்த லட்சணத்துலே செத்துப் போனவ ஒரு பிள்ளைய விட்டுட்டுப் போயிட்டா'ன்னும் அந்தப் பிள்ளை, தன் அம்மாவைத் தூக்கிட்டுப் போகக் கூடா துன்னு கதறிக் கதறி உடம்பெல்லாம் நீலம் பாரிச்சுப் போச்சு'ன்னும் 'இப்பத் தான் எடுக்க முடிஞ்சது'ன்னும் சொன் னாங்க...''

''விடியற வரைக்கும் போட்டு வைன்னு சொல்றதுக்கு என்னடா...?''



''சொன்னேனே... அழுது அழுது நீலம் பாரிச்சப் பிள்ளைய ஆஸ்பத்திரியில சேர்த்திருக்குதுன்னு சொன்னுங்க... அதுவும் போயிட்டா, தனக்கு வாழ்க்கையில எதுவுமே இல்லேன்னு அந்தத் தாடிக்காரன் அழுதப்ப, என்னுலே அனுதாபப்படாம இருக்க முடியல்லீங்க... நான் — பொழுது விடிஞ்சு பொழுது போனு — பொணத்து மூஞ்சியிலேயே கண் முழிச்சு, அதுகளை எரிக்கறதுலேயே பொழுதை செலவிட்டாலும்... எனக்கும் மனசுன்னு ஒண்ணு இருக்குங்க... நானும் பிள்ளைக் குட்டிக்காரன். என்பெண்டாட்டிய நாலு வருஷத்துக்கு முந்தி இதே சுடுகாட்டுல வச்சுத்தான், என் கையாலே கொளுத்தினேன். அப்ப, என் நாலு வயசு மகன் அழுத அழுகையும், எரியற நெருப்புல ஓடிப் போய் விழ அவன் துடிச்ச துடிப்பும்.. எனக்கு இன்னும் மறக்கல்லீங்க...''

இதைச் சொல்லும்போதே அவன் கண் கலங்குகிறது... நெருப்பிலேயே வாசம் செய்யும் அந்த இதயத்துக்குள்ளும் கனை மாதிரி ஈரக்கசிவு இருப்பதைத் தனது வார்த்தைகளால் தெரிவித்த போது...

பரந்தாமனும் மற்றவர்களும் எதுவுமே பேச முடியாத நிலை...

''சார், பாடிய எடுத்துட்டுப் போய், முறைப்படி சடங்குகளைச் செஞ்சு கொண்டு வரலாமா... அது என்னமோ இத்தனைசெல்வாக்கோட வளர்ந்த பொண்ணு. அனாதைப் பொணம் மாதிரி எரியறது— எனக்கே ரொம்பக் கஷ்டமா இருக்கு...''

'வேண்டாம்' — என்பது போலத் தலையை அசைக்கிருர் பரந்தாமன்.

விஜயின் உடல் மீது பரப்பப்பட்டிருந்த விறகுக் கட்டைகளையும், விரட்டிகளையும், போலீஸார் பாதி எரிகையிலேயே கலைத்து விட்டிருந்தபடியால்...

தம் கைகளாலேயே அவைகளை ஒழுங்கு படுத்துகிறுர்... முகத்தை, விறகுச் சுள்ளியல் மூடுவதற்கு முன் ஒருகணம் நிதானித்து அந்த முகத்தையே உற்றுப் பார்க்கிருர்...

'நீ பிடிவாதக்காரி... ஒத்துக்கறேன்... பிடிவாதத்துல மாத்திரம் என் மக, அவ மாமாவையே கொண்டு பிறந்திருக்கான்னு உங்க அம்மா சொன்னப்ப எல்லாம் பூரிச்சுப் போயிருக்கேன்... இப்ப, செத்ததுக்கு அப்புறமும் உன் பிடிவாதத்துல, நீதான் ஜெயிச்சே... நான் தோற்றுப் போய் நிக்கறேன்... உன் முன்னுலே...'

அவர், நடுங்கும் விரல்களால் அவளது சில்லிட்ட கன்னத்தைத் தொட்டு முத்தமிட்டார்.

இதற்குள் போலீஸ், ராஜாவுடன் வந்த ஆட்களை அடையாளம் காண்பிப்பதற்காக, இடுகாட்டுக் காவலாளியை, போலீஸ் வேனில், ஏற்றிக் கொண்டது.

அனேகமாக அத்தனை பேருமே — சைதாப்பேட்டை, மாம்பலம், ரயில்வே ஸ்டேஷன்களில் பிடிபட்டு விட்டனர்.

ஆனுல்—

ஒருத்தருக்காவது, ராஜாவைப் பற்றிய முழு விவரமும் தெரியவில்லை.

''வேலே வந்தாருங்க... ஒரு பொணத்தை எரிக்கணும்ணுரு... 'கொலையா'ன்னு கேட்டோம். இல்லே, என் பெண்டாட்டி... காய்ச்சல்லே செத்துட்டா... எங்களுக்கு வேற நாதி இல்லே.. பணம் தரேன். பாடை கட்டுங்கன்னுரு... கட்டினேம். கூடவாங்க தனியாப் போக கஷ்டமா இருக்குன்னு அழுதாரு.... போனேம்... நடுவழியில கள்ளுக்கடையில எல்லாருக்கும் வயிறு முட்ட கள்ளு வாங்கித் தந்தாரு. தான் மட்டும் தொடல்லே. 'நீயும் போடேன் துக்கம் குறையும்'னு சொன்னேம். 'எனக்குப் பழக்கமில்லே'ன்னுட்டாரு... கள்ளு உள்ளே போன ஜோர்லே, எங்களுக்கு அவரு மேல ஏகப்பட்ட மதிப்பு தோணிடுச்சு சார்... செத்துப் போன அவரு பெண்சாதிக்காக நாங்க எல்லோரும் அழுதோம்... அதுவும், அதோ, அந்த மாதையன்தான்... முழு போதையில 'ஓ'ன்னு அழுதான்... விழுந்து புரண்டு... 'போயிட்டியா, தங்கச்சி...'ன்னு...''

அவன் சுட்டிக் காட்டிய மாதையன், தலையைத் தொங்கப் போட்டபடி நின்றிருந்தான். அவன் முகத்தில், முதல் நாள் சகாக்களின் முன் அசட்டுத்தனமாய் நடந்து கொண்ட அவமானம்... இன்னமும் சலையாமல் இருந்தது.

**வி**ஜியின் இறப்பு மட்டுமல்ல... அவளது தனம் கூட, பரந்தாமனைப் பெரும் அளவில் பாதித்து விட்டது.

வீட்டில் யாருடனும் பேசுவதே இல்லை... தமக்குள்ளேயே அடைந்து கிடக்க, கிடக்க, ராஜாவின் மீது இனந்தெரியாத எரிச்சல்.

'இத்தனைக்கும் காரணம் யார்...?'

'இவன்தானே...'

''இவளைக் காப்பாத்தப் போய்த்தானே, என் விஜி, என் கையாலேயே அடிவாங்கிச் செத்தா...'

'அப்படி உயிருக்கு உயிரானவளைப் பலி கொடுத்தாவது இவன் ஓடி ஒளியணுமா...?'

'ச்சீ... வெட்கமாயில்லே...'

'ஒரு போலீஸ்காரனுட பிள்ளை, சாவுக்கு இப்படிப் பயப்படறதா...?'

பரந்தாமன், தம் அறையை விட்டு வெளியே வருவதே இல்லை. வந்தால் —

''யாரைத் தைரியசாலி சக்தி வாய்ந்தவன் என்று கருதுகிறீர்கள்?''—கூட இருந்த சீடர்களிடம் முகம்மது நபி கேட்டார்.

''வீரத்துடன் போரிட்டு வெற்றி அடைந்தவர்களை''என்ருர்கள் சீடர்கள்.

''இல்லை. கோபம் வந்து தன்னைக் கட்டுப்படுத்தி அடக்கிக் கொள்கிறவன் பெரிய தைரியசாலி'' என்ருர் முகம்மது நபி.

—எஸ். முகம்மது யூசுப்.

## அருள்வாக்கு

நம் மனஸ் ரொம்பவும் சஞ்சல ஸ்வபாவமுள்ளதாகையால் தெய்வ சம்பந்தமான நூல்களை, ஸ்தோத்திரங்களை நாமே படிக்கும் போதும் சொல்லும்போதும் கூட மனஸ் கொஞ்ச நாழிக்கு அப்புறம் வேறெங்கேயோ ஓட ஆரம்பிக்கிறது. ஆனால் இந்தச் சலன மனஸையும் இழுத்து அதிக நாழி தன்னில் தோய்த்து வைத்துக் கொள்ளும் சக்தி கலைகளுக்கு இருக்கிறது. ஓர் அழகான சிற்பம், சித்திரம் என்றால் நீண்ட நாழி அதையே நாம் பார்த்துக் கொண்டிருக்கும்படி பண்ணுகிறது. ''பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து'', ''குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில்'', ''பொன்னார் மேனியனே'' போன்ற பக்திப் பரவசத்தில் பிறந்த அம்ருத வாக்குகளை நாமாகச் சொல்லும்-போது அந்த அம்ருதத்தை அரை நிமிஷம் தான் ருசி பார்க்க முடிகிறது என்றால் இவற்றையே உருக்கமான ரக்தி ராகங்களிலோ கம்பீரமாயிருக்கிற கனராகங்களிலோ இழைத்து இழைத்துப், பலுக்கிப் பலுக்கி கானம் செய்தால் கால் மணி, அரை மணி கூட ஒரு விருத்தத்தையே விந்யாசம் செய்தாலும் அவ்வளவு நேரம் மனம் அதிலே தோய்ந்திருந்து தெய்வ ஸ்மரணத்தில் விலகாமல் இருக்கிறது. அம்ருதத்திலேயே ஒரு தேவஜாதி மாம்பழத்தை ஊறப் போட்டு விட்டால் எப்படி அதை ரொம்ப



நாழி கொஞ்சம் கொஞ்சமாக ஆஸ்வாதம் பண்ணலாமோ அப்படி அம்ருதவாக்கு ஸங்கீதப் பழத்தில் ஊறும்போது ஆகிறது. நாம் தப்பாகப் பிரயோஜனப் படுத்திக் கொள்வதால் கீதமும் நிருத்தியமும் சித்த விகாரத்தை உண்டாக்குவதாயிருந்தாலும் வாஸ்தவத்தில் இவை நம்முடைய சலன சித்தத்தை ஈசுவரனிடம் நன்றாக நிறுத்தி, அப்புறம் அர்த்த லயிப்பில் ஈசுவரன் என்று கூட ஒன்று தெரியாமல் சித்தமே ஸமாதியில் நிறுத்தப்படுவதற்கு உபயோக மாகிறது. அலைபாயும் சித்தத்தை நிலைபரவ வைக்கக் கலை உதவுகிறது. அதனால்தான் பூஜையின் உபசாரங்களில் சேர்த்தார்கள்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்

நேரே வாசலில் நிற்கும் போலீஸ் ஜீப்பில் தான் போய் ஏறிக் கொள்வார். அவருடன் கூடவே ஓடும் ஒரே ஆள் — எத்திராஜ்தான்.

பல சமயங்களில் — சமையலறை வரையில் போய் அவருக்குச் சாப்பாடு எடுத்து வருவது கூட அவன்தான்.

சாப்பாட்டு மேஜைப் பக்கமே பரந்தாமன் போவதில்லை... எங்கே, அங்கெல்லாம் தான் விஜி, நீக்கமற நிறைந்து சிரிக்கிறானே...

மீனாட்சி கூட, அவரை நெருங்கிப் பேச முடிவதில்லை...

என்றாவது—

சிரமத்தைப் பாராமல், மாடியேறி — அவரது அறைக்குப் போய் மெள்ள எட்டிப் பார்ப்பாள் அவள்...

பரந்தாமன், தமது போலீஸ் உடையைக் கூடக் கழற்றாமல், கையில் துப்பாக்கியுடன், ஆடும் சாய்வு நாற்காலியில், சாய்ந்து.. ஆடிக் கொண்டிருப்பார்...

ஒருமுறை, ஒரேயொரு முறை மீனாட்சி கேட்டாள்.

''எல்லாம் போயாச்சு... கண்ணுக்குக் கண்ணா வளர்த்தப் பொண்ணையே வாரிக் கொடுத்தாச்சு. இன்னும் எதுக்கு எப்பப் பார்த்தாலும் கையிலத் துப்பாக்கி,...? உம்... தூங்கறப்ப, சாப்பிடறப்ப கூட, இடது கையில ரிவால்வரை வச்சுட்டிருந்தா பார்க்கப் பயமா இருக்குங்க... பாருங்க சின்னக் கண்ணன் கூடத் தாத்தா கிட்ட வர பயப்படறான்...''

''பயப்படறானா... ஊ ஊா... ஏண்டா, பயப்பட றியா? அடத்தூ... வெட்கமாயில்லே... நிமிர்ந்து நில்லுடா... துப்பாக்கி முன்னாடி நெஞ்சை நிமிர்த்திக் காட்டு... இதப் பாருடா — நீ போலீஸ் கமிஷனர் பரந்தாமனோட பேரனா இருந்தா தைரியமா தாத்தா கிட்ட வந்து மடியில உட்காரு. இல்லே, கொலைகாரன் பெத்த பிள்ளையா இருந்தா — உங்க அப்பன் மாதிரியே, பொம்பளைத் தலைப்புல ஓடி ஒளிஞ்சுக்க...''

அவர், மீனாட்சியின் இடுப்பில் இருந்த சின்னக் கண்ணனைப் பார்த்து, கர்ஜனை செய்ய...

குழந்தை, பாட்டியின் பிடியிலிருந்து திமிறிக் கொண்டு இறங்கி, ஓடி வந்து பரந்தாமனின் மடி மீது ஏறி அமர்கிறான்...

அது மட்டுமல்ல...

அவர் கையிலிருந்த ரிவால்வரின் குண்டு பாயும் துவாரத்தில், தனது பிஞ்சுவிரலை நுழைத்துப் பார்த்துச் சிரிக்கிறான்...

மீனாட்சிக்குப் பின்னால், மகனுக்காக ஓடிவந்த உமா, இந்தக் காட்சியைக் கண்டதும் கண்களை, கைகளால் பொத்திக் கொண்டு அலறுகிறாள்...

''என் குழந்தையையும் கொன்னுடாதீங்க... என் குழந்தையை விட்டா — எனக்கு வேற யாருமில்லே — அத்தை, குழந்தையை வாங்கித் தாங்க...''

பரந்தாமன் புருவம் சுருங்க, மருமகளை உற்றுப் பார்க்கிறார்... பொங்கி வந்த துக்கத்தில் விழிகள் செக்கர்வானமாய்ச் சிவக்கிறது...

(தொடரும்)

வியாழக் கிழமை இரவு மணி 9—30. பரபரப்புடன் ரேடியோவை 'ஆன்' பண்ணு கின்றன பல்லாயிரக் கணக்கான கரங்கள்.

கடந்த எட்டு வாரங்களாகவே வானொலி—வர்த்தக ஒலிபரப்பில் இந்த நேரம் தமிழன்பர்களுக்கு மிகவும் பயனுள்ள இலக்கிய ரசனைக்கேற்ற நல்ல நேரமாக அமைந்து வந்திருக்கிறது.

''எங்கள் ஒலிபரப்புக்களின்பட்டியலிலேயே இது மிகவும் உயர்வாக இருக்கிறது. மிகவும் அறிவுபூர்வமாக இருக்கிறது'' என்று வானொலி நிலைய அதிகாரியான திருவாளர் ஜே.டி. சுவாமிநாதனும் சந்திரமௌலியும் மனம் விட்டுப் பாராட்டுகிற இந்த நிகழ்ச்சியை நடத்தியவர் கவிஞர் வைரமுத்து. தயாரித்து வழங்கியவர் எஸ். வி. ரமணன்.



✕ வைரமுத்து மனைவி பொன்மணியுடன்

# கவிதைக்கு ஒரு நல்ல நேரம்

கல்கி தமிழ் இலக்கியத்திற்கு, குறிப்பாக கவிதைத் துறைக்கு மிகப் பெரிய தொண்டாற்றியிருக்கிறது என்று நிகழ்ச்சியை வாரா வாரம் கேட்டு அனுபவித்தவர்கள் கடிதம் எழுதுகிறார்கள்.

வானொலியில் நிகழ்ச்சியைக் கேட்க முடியாதவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கவும் முழுமையாகக் கேட்கும் வாய்ப்புப் பெறாத பலரின் வேட்கையை நிறைவு செய்யும் எண்ணத்தோடும் இங்கே சில தெறிப்புக்களைத் தொகுத்து வழங்குகிறோம்.

### புதுக் கவிதை பற்றி புதுக் கவிதை

● புதுக் கவிதை பற்றி ஒரு புதுக்கவிதை சொல்லியே நிகழ்ச்சியைத் தொடங்கிவைத்தார் கவிஞர் வைரமுத்து. அந்தப் புதுக் கவிதை இதோ:

புதுக் கவிதை என்பது
சொற்கள் கொண்டாடும்
சுதந்திரதின விழா
யாப்பு என்னும் பதிருக்குள்
இலக்கணம் போட்ட
உத்தரவுக்குப் பயந்து உறங்கும்
சோம்பேறிச் சொற்களுக்கா,
நீங்கள்—
கவிதை என்று கட்டியம் கூறுவீர்?
ஒன்று கேட்கிறேன்,
உறைக்குள் இருந்தால்தான்
அதற்கு வாள் என்று பெயரா?
புதுக்கவிதை என்னும் போர்வாள்
இலக்கண உரையிலிருந்து
கழட்டப்பட்டிருக்கிறது.
ஏனெனில்—
கவர்க் கோழிகள் கூவிப்
பொழுது விடியாது என்பது
அந்தப் போர்வாளுக்குப்
புரிந்தே இருக்கிறது
மரபுக் கவிதைகள்
மண்ணில் இருந்தாலும்
விண்ணையே பார்த்துக் கொண்டிருக்கும்
மலர் வர்க்கங்கள்!
புதுக் கவிதைகளோ,
விண்ணில் இருந்தாலும்
மண்ணையே பார்த்துக் கொண்டிருக்கும்
சூரிய சந்திரர்கள்
மரபுக் கவிதைகள் ஜாதகங்கள்,
புதுக் கவிதைகளோ முகவரிகள்!

### இளைஞர்கள் போற்றுவது ஏன்?

● புதுக் கவிதைகளெல்லாம் போற்றப் படுவதற்குக் காரணம், அவற்றில் உள்ள சொற் சிக்கனம்தான். புதுக் கவிதைகளைப் பற்றிப் பொதுவாகச் சொல்லவேண்டுமானால் அதை 'தலைதட்டிய திருக்குறள்கள்' என்றே சொல்லலாம். நம்முடைய நவீன காலப் பிரச்னைகளை நேரடியாக அலசுவதற்குப் புதுக் கவிதை தடையில்லாமல் வருகிறது... நிஜங்களை வலிவோடும் துணிவோடும் நெஞ்சில் தைக்கிற மாதிரி எடுத்துச் சொல்வதற்குரிய விஷயமாகத்தான் புதுக் கவிதை இருக்கிறது.

போனஸ் தகராறில் பேரம் முடிந்து ஏற்கப்பட்ட விகிதத்தில் வழங்கப்பட்ட தொகையைப் பெற விரும்பாத ஒரு தொழிலாளி சொல்வதாக ஒரு கவிதை:

''உங்களைக் கடிக்க வந்த
நாய்களான எங்களுக்குச்
சில எலும்புத் துண்டுகளைப் போட்டு
அனுப்பிவிட்டீர்கள்...
எனக்கு மட்டும் தெரியும்...
அந்த எலும்புத் துண்டுகள் கூட
எங்கள் விலாவிலிருந்தே
எடுக்கப்பட்டதுதானே...''

# நேயர் விருப்பம்

புதுக் கவிதைக்கும் வாழ்க்கைக்கும் இடையில் திரை கிடையாது என்பது ஒரு பெரிய உண்மை. அதனால்தான் புதுக் கவிதையை இளைஞர்கள் மிகவும் போற்றி வரவேற்கிறார்கள்.

## கம்பன் தந்த உத்தி

● ''மரபுக் கவிதைக்குள் இருக்கிற நல்ல அம்சங்களை யெல்லாம் புதுக் கவிதை தனக்குள் பதியம் போட்டு வைத்திருக்கிறது. வடிவத்தில் வேறுபடலாமே தவிர, உத்திகளில் வேறுபடவில்லை. ஒன்றை ஆழமாகச் சொல்வது எப்படி என்பதில் புதுக் கவிதை வெற்றி பெற்றிருக்கிறது. அது மரபுக் கவிதை கொடுத்த பிச்சை என்றுகூடச் சொல்ல வேண்டும்.

கம்பன் ஒரு கவிதை சொல்லுவான்.

அனுமனைக் கட்டி சபைக்கு இழுத்து வருகிறான் இந்திரஜித். அவனைக் கட்டுவதற்கு அரக்கியரின் தாலிக் கயிறுகளைத் தவிர எல்லாக் கயிறுகளையும் கொண்டு வந்தார்களாம்!

''பெண்ணிற் கிளையும் மங்கலத்தின்
பிணித்த கயிறே இடை பிழைத்த
கண்ணிற் கண்ட வன்பாசம்
எல்லாம் இட்டுக் கட்டினார்...''

என்று சொல்லுவார் கம்பர். இது ஓர் அழகான உத்தி. எங்கே உவமை சொல்கிறாயோ அந்தத் தளத்தை விட்டு வெளியே செல்லாதே என்பது மரபுக் கவிதை எனக்குக் கற்றுக்கொடுத்த பாடம்.

கயிறு என்றவுடன் கவிஞனுக்குத் தாலிக் கயிறு நினைவுக்கு வருகிறது. சங்க இலக்கியத்தில் குறிஞ்சி நிலத் தலைவி, தன்னுடைய தலைவனைப் பார்த்துப் பேசுகிறபோது கலப்பையால் என் நெஞ்சை உழுதாயே என்று சொல்ல மாட்டாள். அம்பால் என் நெஞ்சைத் துளைத்தாயே என்றுதான் அவள் சொல்வாள். அம்பு என்பது குறிஞ்சி நிலத்துக் குரிய கருப் பொருள். வேட்டைத் தொழில் சார்புடையது. மருத நிலத்துக் காரியாக அந்தத் தலைவி இருப்பாளேயானால்தான் கலப்பையை உவமை சொல்வாள். இந்த மாதிரியான மரபொழுக்கம் மீறிப் போனதால்தான் பிற்காலக் கவிதை, உணர்த்தும் திறனைக் கொஞ்சம் இழந்து விட்டதோ என்று தோன்றுகிறது'' என்று மேல் விளக்கமாகச்சொன்னார் கவிஞர்.

கம்பர் தந்த உத்தியைத்தான் பயன்படுத்தியிருக்கிறேன் என்று சொல்லி வேலைக்குப் போகும் பெண்களைப் பற்றி எழுதிய பாடல் வரியொன்றைச் சொல்லிக் காட்டினார் கவிஞர்.

''புறப்படுகிற அவசரத்தில்
ஊட்ட நினைக்கும் பால்கூட
உறைந்து விடுகிறது
அவள் காட்ட வேண்டிய பாசத்தை
ஞாயிற்றுக்கிழமைக்குத் தள்ளிப்
போடுகிறாள்!''

## காலமும் கவிதை வடிவமும்

● புதுக் கவிதைகள் காவியம் படைக்கக் கைகொடுக்குமா என்று கேட்டபோது சொன்னார்:

இன்று நாம் காவிய காலத்தில் வாழவில்லை. நமது இயந்திர வாழ்க்கையின் வேகத்தில் கவிதைகளை ஆழமாக ரசிப்பதற்குரிய பார்வையிலிருந்து விலகி, அவ்வப்போது கிடைக்கிற சில தெறிப்புக்களைச் செரிக்கிற யுகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

கால மாற்றம்தான் இலக்கியத்தின் வடிவத்தை மாற்றுகிறது. ஒரு விமரிசகர் சொன்னார், ''பத்தாம் நூற்றாண்டில் நம் கல்கி வாழ்ந்திருந்தால் அவர் ராமாயணம் எழுதியிருப்பார். இருபதாம் நூற்றாண்டில் கம்பர் வாழ்ந்திருந்தால் அவர் 'சிவகாமியின் சபதம்' எழுதியிருப்பார்'' என்று.

இன்று காவியம் எழுத வேண்டிய கட்டாயத்தில் நாம் இல்லை. எனவே இந்த வடிவ மாற்றங்களுக்கு நாம் உட்பட்டே ஆக வேண்டும்.

## கூந்தலா வள்ளலா?

● அண்மையில் கவிஞர் மீரா அவர்களின் அச்சுக்கு வராத ஒரு புதுக் கவிதையை நான் பார்க்க நேர்ந்தது. மிகவும் சிலிர்த்துப் போனேன். காதலன் காதலிக்குப் பூச்சூட விரும்புகிறான். பூ வாங்கிக் கொண்டு போகிற போது அவனுக்கு ஒரு நினைப்பு வருகிறது. நான் ஒரு பூங்கொடிக்கே பூச்சூடப் போகிறேனா என்று வியக்கிறான்.

''முதன் முதலாகக்
கொடை கொடுக்க விரும்பியவன்
கர்ணன் வீட்டுக்
கதவைத் தட்டிய மாதிரி
பூங்கொடிக்கே நான்
பூச்சூடப் போகிறேனா?''

இந்த அழகிய கவிதையின் லயத்தில் நான் சொக்கி விழுந்தேன். இதே போல் நான் மிகவும் ரசித்த இன்னொரு கவிதை அப்துல் ரஹ்மானுடைய 'திட்டங்கள்' என்னும் கவிதை.

'வரங்களே சாபங்களானால்
இங்கே தவங்கள் எதற்காக?'

இன்னும் ஒரு கவிதை. ஒரு விஷயத்தைக் கவிஞன் எவ்வளவு நாகரிகமாகச் சொல்லியிருக்கிறான் என்பதை உங்களுக்குத் தெரியப் படுத்துவதற்காக இதைச் சொல்கிறேன்.

'உன் இடையைப் பார்த்தபோது
பிரம்மன் கஞ்சன் என்று நினைத்தேன்.
சற்று நிமிர்ந்தேன்...
அவன்வள்ளல் என்றுகண்டுகொண்டேன்!'

சொற்சிக்கனம், இறுக்கம், வார்த்தைகளுடைய நெருக்கம்... இதில் எவ்வளவு சுகம் இருக்கிறது பாருங்கள். உண்மையை இவ்வளவு ஆழமாகத் தெரியப்படுத்தக் கூடிய

உத்தி புதுக் கவிதையில் மட்டும்தான் கைவந்த கலை.

### இளையராஜா கேட்டது

● அலைகள் ஓய்வதில்லை படத்தில் ஒரு பாடல். இளையராஜா அவர்கள் இசையமைத்தது. காலையில் ஒலிப்பதிவு செய்து கொண்டு அன்று மாலை அவர்கள் வெளியூருக்கு விரைகிறார்கள். அவசரமாக என்னை அழைத்து இந்த மாதிரி ஒரு பாட்டு. கடற்கரையில் காத்திருக்கிற ஒரு காதலியைப் பற்றியும் அவளுடைய வருகையைப் பற்றியும் எழுதிக் கொடுங்கள் என்றார்கள். நான் எழுதிக் கொடுத்து இளையராஜா அவர்கள் இசையமைத்த முதல் பாட்டு இதுதான். மற்றதெல்லாம் மெட்டுக்குளெழுதியவை. இது மட்டும் எழுதிக் கொடுத்து அப்புறம் மெட்டமைத்த பாட்டு. 'விழியில் விழுந்து....' என்ற இந்தப் பாட்டை ஒரு பத்து நிமிடங்களில் எழுதிக் கொடுத்ததாக எனக்கு நினைவு. பாட்டைக் கொண்டு போய்க் கொடுத்த போது பாரதிராஜா அவர்கள் என்னை அப்படியே அணைத்துக் கொண்டார்கள். ரொம்ப சுகமான அனுபவம் அது.

### நயா கயா

● நயா பைசாவில் இன்று நயா போய் விட்டது. அதேபோல் புதுக் கவிதை என்று முத்திரை குத்தப்பட்ட இந்த வடிவத்தினுடைய அழகு அறிந்து கொள்ளப்பட்டு இது ஏற்கப்பட்டான பிறகு கவிதை, கவிதையாகவே இருக்கும். அப்போது ''புது'' என்கிற அடை உதிர்ந்து விடும். எப்போது இது உதிரும் என்று சொல்ல முடியாது. ஒரு நூற்றாண்டு இடைவெளியில் இது உதிரலாம்.

### மஞ்சள் மை

● திரைப்படம் என்கிற சாதனம் மக்களை மேம்படுத்துவதற்கு மாறாக, அவர்கள் இருக்கிற பள்ளத்துக்குள்ளேயே தள்ளிக் குழி தோண்டிப் புதைக்க முயல்கிறபோது அதை 'திக்குச்சிக்குத் தின்னக் கொடுப்போம்' என்று சொன்னேன். இப்போதும் எனக்கு அந்தக் கருத்து இருக்கிறது. வேடிக்கையாக ஒன்றைச் சொன்னேன். 'இன்று படத்துக்குப் பாட்டெழுதக் கம்பனே வந்தாலும் சீதையைப் பற்றிச் சிலேடையில் சொன்னால்தான் கம்பனுக்கும் சினிமாக் கம்பெனியில் இடம் உண்டு.'

குமரன் கடைந்தான் பாற்கடலை — அவள்
கொதித்துக்கொண்டிருந்தாள் வேர்க்கடலை..

இப்படிப் பல்லவி எழுதினால் மட்டுமே அனுபல்லவிக்கு அனுமதி உண்டு. சிறுகதை மன்னன் செக்காவ் வந்தால்கூட அவனுடைய பேனாவை மஞ்சள் மையால்தான் நிரப்பிக் கொடுப்பார்கள்.

கல்வியில் குறைந்த ஒரு சமூகத்தில் திரைப்படமென்பது தன்னுடைய விசுவரூபத்தை



''உங்க கதை ரொம்ப சிந்திக்க வைக்குது சார்!''
''அப்படியா?''
''ஆமாம்!... இதையெல்லாம் எப்படிப் பிரசுரிச்சாங்கன்னு!''
—எம். பாஸ்கர்

எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிறது. மக்களை மேம்படுத்துவதற்கான ஒரு மாபெரும் சாதனம் திரைப்படம். இந்தக் கத்தியை நாம் நல்லவற்றுக்குப் பயன்படுத்துவோம். ஆளி குடிக்கப் பயன்படுத்த வேண்டாம்.

### புதுக் கவிதைக்கு இசை இறக்கை

● புதுக் கவிதை என்பது பேச்சு ஒலிக்குக் கட்டுப்பட்டது என்று சொல்ல முடியுமே தவிர இசைக்குக் கட்டுப்பட்டது என்று சொல்ல முடியாது. ஆனாலும் புதுக் கவிதைக்கும் இசை இறக்கை கட்டிவிட முடியுமா என்று முயற்சி செய்து பார்த்திருக்கிறோம்.

அண்மையில் தேசிய விருது பெற்ற 'ஒரு இந்தியக் கனவு' படத்தில் புதுக் கவிதையாகிய ஒரு பாடல் இடம் பெற்றிருக்கிறது. திரு கோமல் சுவாமிநாதன் என்னை அழைத்து 'நீங்கள் பாட்டு எழுதிவிட்டீர்கள்; புறப்பட்டு வாருங்கள்' என்று அழைத்தபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ''இப்போதுதானே அழைக்கிறீர். அதற்குள் பாட்டு எழுதி விட்டீர்கள்... புறப்பட்டு வாருங்கள் என்றால் என்ன அர்த்தம்?'' என்று கேட்டேன்.

''உங்களுடைய 'இருத்தி எழுதிய நீர்ப்புக்களிலிருந்து ஒரு புதுக் கவிதையை அப்படியே எடுத்து வைத்திருக்கிறோம். திரு எம். எஸ். வி. அவர்கள் இசையமைத்துக் கொண்டிருக்கிறார். வந்து பாருங்கள்'' என்றார் அவர்.

அதுவே ரொம்ப இயல்பாக அமைந்திருந்தது. அந்தப் பெண்ணின் பெயர் அநாமிகா. அதாவது நாமம் அற்றவள். பெயரில்லாதவள் என்று பொருள். அவள் ஒரு சமூக விழிப்புணர்ச்சி உடையவள். இலக்கியத் தாகமுடையவள். அவள் காதலிக்கிறாள் என்றால் ரொம்ப நாகரிகமாகக் காதலித்தாள். புதுக் கவிதை 'ஸ்டை'லில் காதலித்திருக்கிறாள் அவள்.

'என் பெயரே எனக்கு மறந்துபோன
இந்த வனாந்தரத்தில்

என்னைப் பெயர் சொல்லி அழைத்தது
யார்? நீயா?
என்னையொரு மின்னல் கீற்று
என்றல்லவா நினைத்திருந்தேன்
நீ எப்படி அதில்
நிரந்தரப் பாய் முடைந்தாய்?
முதலில் சப்தங்களுக்கே
அர்த்தம் சரியாய் விளங்கவில்லை.
இப்போதோ—
மௌனத்துக்கும்கூட உரையெழுத
முடிகிறது!

இதை ஒரே முறை இரு எம். எஸ். வி. அவர்கள் வாசித்துப் பார்த்தார். உடனே ஆரம்பித்துப் பாடி முடித்து விட்டார்.

நியாயப்படி பார்த்தால் புதுக் கவிதைக்கு இசையமைக்கக் கூடாது. முடியாது என்ப தில்லை. முடியும் என்றுதான் நிரூபித்திருக் கிறோமே. கூடாது.. புதுக் கவிதை என்பது இசையிலிருந்து வெளியேறி வந்தது. கருத் துத்தான் அதற்கு முக்கியமே தவிர இசை, தாளம், சந்த ஒழுங்கு, அதை யெல்லாம் விட்டு வெளியேறும். இருந்தாலும் ஒரு சின்ன முயற்சி இது.

## பிதாமகன் பாரதி

● பாரதியார்தான் புதுக் கவிதைக்கு மூலம் என்பதை இலக்கிய வரலாறே ஒப்புக் கொண்டிருக்கிறது. அது ஒரு பெரிய உண்மை. ஆனால் ஒன்று. நான்தான் புதுக் கவிதைக்குப் பிதாமகன் என்று எண்ணிக் கொண்டு அவர் எழுதவில்லை. வேதங்களைத் தமிழில் மொழி பெயர்க்க அவர் முனைந்தபோது கவிதையும் அல்லாத உரைநடையும் அல்லாத ஒரு வடிவம் அவருக்குத் தேவைப்பட்டது. அவை இரண்டுக்கும் இடைப்பட்ட வடிவமான வசனக் கவிதை வந்தது. அதுதான் புதுக் கவிதைக்கு மூலம் என்று நான் கருதுகிறேன்.

## தவறான கருத்து

● இலக்கணம் தெரியாதவர்கள்தான் புதுக் கவிதை எழுத வந்திருக்கிறார்கள் என்பது மிகத் தவறான கருத்து. மரபுக் கவிதைகளின் இலக்கணத்தில் மிகவும் ஆழ்ந்து தெரியவர்களேதான் புதுக் கவிதைத் துறையில் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்பது மிகப் பெரிய உண்மை.

ஆரம்ப காலத்தில் புதுக் கவிதையின் வித்தாக இருந்தவர் ந. பிச்சமூர்த்தி. அவருடைய 'காட்டு வாத்து' மிகச் சிறந்த மரபுக் கவிதை நூல் என்பதை நாம் யாரும் மறந்துவிடக் கூடாது. விருத்தத்தில் அவர் ஒரு பெரிய வேங்கை. அறுசீர் விருத்தங்களும் எண்சீர் விருத்தங்களும், கட்டளைக் கலித்துறைகளும் எழுதிய பிறகுதான் அவர் புதுக் கவிதைத் துறைக்கே வந்தார். மரபுக் கவிதையில் உள்ள நல்ல அம்சங்கள் எல்லாம் புதுக் கவிதைக்குப் போய்ச் சேருகின்றன. புதுக் கவிதை மொத்தத்தில் எதுகையைத் தூக்கி எறிந்து விட்டாலும் மோனையை முற்றிலும் தூக்கி எறியமுடியவில்லை. மோனைக் கும்மூளைக்கும் தொடர்பு உண்டு என்று சொல்வார்கள். எனவே புதுக் கவிதையில் அந்த மோனை இன்னும் ஓர் அங்கமாய் ஒட்டிக் கொண்டிருக்கிறது. எனவே மோனை என்பது மரபுக் கவிதை கொடுத்த வரம். மரபுக் கவிதை புதுக் கவிதையை அரண் செய்கிறது என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

## பாலசந்தர் செய்த திருத்தம்

● ஆரம்ப காலத்தில் என்னுடைய பாடல்களில் பிறர் மாற்றம் செய்வதை ரொம்பப் பிடிவாதமாக மறுத்தேன். இது ஒரு பைபிள் மாதிரி, திருத்தத்துக்கு உட்படுத்தக்கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அந்தப் பிடிவாதத்திலிருந்து பின்னால் வந்து நான் கொஞ்சம் மாறினேன். மக்களின் ரசனையை என்னைவிடச் சிலர் நன்றாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள் என்பது மிகப் பெரிய ஓர் உண்மை. நாம் ஓர் இலக்கிய உயரத்திலிருந்து ஜனங்களைப் பார்க்கிறோம். ரசனையின் மட்டத்திலிருந்து மக்களை நாம் பார்க்க வேண்டும் என்பது ஒரு பெரிய உண்மை. முதலில் மாற்றம் என்பது என்னுடைய பாடலைச் 'சிதைக்கிற' விஷயமாகக் கருதி வந்தேன். அப்படியில்லை. மாற்றம் என்பது பாடலைச் 'செதுக்குகிற' விஷயம் என்பதைப் பின்னால் தெரிந்து கொண்டேன். 'அச்சமில்லை அச்சமில்லை' படத்தில் இரு பாலசந்தர் வாய்ப்புக்கொடுத்திருந்தார்கள். 'ஆவாரம் பூவு' என்று ஓர் அழகான பாடல் வரும். காதல் வளர்கிற பருவத்தில் அந்தப் பாட்டு வருகிறது.

''நீ பார்க்கும் போது தவிப்பாச்சு...
செவ்வந்திப் பூவு செவப்பாச்சு....''

என்று எழுதியிருந்தேன். இந்தப் பாடலை பாலசந்தர் அவர்கள் மிகவும் ரசித்தார்கள். 'ஒரேயொரு 'ம்' மட்டும் சேர்த்துக்கொள்ள முடியுமா? என்று கேட்டார். 'என்ன' என்று கேட்டேன்.

'''செவ்வந்திப் பூவும் செவப்பாச்சு' என்று சொல்லுங்களேன்'' என்றார். நான் அசந்து போனேன். ஒரு 'ம்' சேர்ப்பதனால்

---

**அடுக்குமா?**

மழை ஏன் பாதிக்கப்படாது? உலகம் முழுமையிலும் ஒவ்வொரு வருடமும் சுமார் 2,50,000 சதுரகிலோ மீட்டர் அளவுள்ள காடுகள் அழிக்கப்படுகின்றன! —தெய்வயானை.



எவ்வளவு மாற்றம் வருகிறது பாருங்கள். அதன் அர்த்தத்தையே தூக்கி ஓர் உயரத்துக்குக் கொண்டு போய் விட்டது.

## இயல்பாய்ப் பிறமொழிச் சொற்கள்

● தவிர்க்க முடியாத இடங்களில் பிற மொழிச் சொற்களை இட்டுக் கொள்வது பற்றி யாரும் தடுக்க வேண்டாம் என்பது என் கருத்து. ஆனால் அதுவே ஒரு செயற்கையான திணிப்பாய் மாறுகிறபோதுதான் நமக்குப் பயமாக இருக்கிறது.

ரோஜாவுக்குத் தமிழில் ஒரு மாற்றுச் சொல் சொல்ல முடியுமா? ரோசா என்று சொல்ல வேண்டி வரும். அதுகூட எழுத்து மாற்றமே தவிர மொழி மாற்றம் அல்ல. ஜாதி என்பதற்கு சாதி என்றுதான் சொல்கிறீர்கள். அதுவும் தமிழ்ச் சொல் அல்ல. சில இடங்களில் தவிர்க்கவே முடியாது. சிலர் வேண்டுமென்றே திணிக்கிறார்கள்.

உதாரணமாகத் தாமரைப் பூக்கள் குளத்தில் பூத்திருக்கின்றன. பறவைகள் அதைப் பார்த்து 'வெள்ளம் தீப்பட்டதென வெரீஇ' என்று புலம்பின, சிறகடித்தன என்று முத்தொள்ளாயிரத்தில் ஒரு கவிதை வருகிறது. தண்ணீரில் தழல் என்பது ஏற்கெனவே முத்தொள்ளாயிரத்தில் சொல்லப்பட்ட ஒரு கருத்து. இதையே புதுக் கவிதையாக ஒருவர் எழுதுகிறார் 'ஜலத்தில் அக்கினி ஜ்வாலைகள்' என்று. இதுதான் திணிப்பு. தவிர்க்க வேண்டிய இடத்தில் தவிர்க்க வேண்டும். இயல்பாக வருவதற்கும் இட்டு நிரப்புவதற்கும் வேறுபாடு இருக்கிறதே.

## நயமான நாட்டுப் பாடல்

● நான் ஒரு நாட்டுப் பாடல்களின் காதலன். நாட்டுப்புறத்திலிருந்து பிறந்து வந்த குழந்தை நான். அந்தச் செம்மண் புழுதியில் புரண்டு, அந்தப் புளிய மரத்தடியில் ஓய்வெடுத்துத் தென்னை மரங்களின் நிழலில் இளைப்பாறி, புல்வெளிகளில் அலைந்து திரிந்து: அந்தச் சில்லி முள்ளுகளில் ஓடி விளையாடி, சில்லிப் பூக்களில் தேனெடுத்து உறிஞ்சிக் குடித்து, அந்த நாட்டு மக்களின் மொழியில் பேசி, அந்த மண்ணுக்கு மட்டுமே உரிய அவர்களின் சங்கீதத்தைக் கேட்டு வளர்ந்தவன் நான்.

தனியாக இருக்கும்போது நான் நாட்டுப் பாடல்களைப் புரட்டிப் புரட்டிப் படித்துக் கொண்டிருப்பேன். அதில் ஒப்பனை இல்லாத ஒரு சுகம் இருக்கிறது. ஆடம்பரமில்லாத வார்த்தைகளின் நேரடியான வெளிப்பாடு இந்த நாட்டுப்பாடல்கள். இவை எனக்குப் பல நேரங்களில் கைக் கொடுக்கின்றன.

குழந்தையைப் பார்த்துத் தாய் பாடுவதாக ஒரு பாடல். குழந்தையின் பாதங்கள் மிகமிக மென்மையானவை.

'தங்கமவன் பூம்பாதம்
தண்ணிபட்டாக் கொப்புளிக்கும்'.

இதைப் படித்து விட்டு இந்த அழகை வியந்து திரைப்படப் பாடல் ஒன்றில் ஒரு



ஆஸ்திரேலியாவில் கிளிகளுக்கென ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது. அங்கே கிளிகளுக்கு அழகாகப் பேசக் கற்றுக் கொடுத்து ''டிப்ளமா''வும் வழங்குகிறார்கள். ''டிப்ளமா'' பெற்ற கிளிகளுக்கு விலை அதிகமாம்!

தகவல்: பாரதி அன்பெழிலன்.

வரி எழுதினேன். எல்லையும் அறியாமல் எல்லையும் மீறி இது வந்திருக்கிறது.

## பிற மொழிகளில்...

கவிதைக்கு மொழி என்பது இரண்டாம் பட்சம்தான். நல்ல கவிதை என்பது மொழி பெயர்க்கப்பட முடியாதது என்பார்கள். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு சுகம் இருக்கிறது. எல்லா மொழிகளையும் கடந்தது தான் கவிதை.

வடநாட்டில் வெள்ளம் வந்த போது என் செவிகளுக்கு வந்த உருதுக்கவிதை ஒன்றைக் கேட்டு அப்படியே அயர்ந்து போனேன். அந்தக் கவிதை -

'அந்த வெள்ளத்தில்
மழையே மூழ்கிவிட்டது
மனிதர்களின் மூச்சு வாசல்களில்
நீர்ச் சுவர்கள் எழுந்து நின்றன!
அலைகளின் கால்கள்
பிணங்களில் தடுக்கி விழுந்தன!

மழை வெள்ளத்தைப் பற்றி ஒரு பூதாகாரமான காட்சி அப்படியே கண் முன்னால் நிற்கிறதல்லவா?

## மெட்டுக்குப் பாட்டா பாட்டுக்கு மெட்டா?

● மெட்டுக்குப் பாட்டெழுதுவது என்பது ரொம்ப சுகம். பாட்டு எழுதி மெட்டமைப்பது என்பது சவுகரியம். அது ஒரு சுகமான அனுபவம். இது ஒரு சவுகரியமான விஷயம். எனக்கு இரண்டும் ஒன்றுதான்.

மெட்டுக்குப் பாட்டெழுதுகிறபோது அதனுடைய மீட்டர் இசையமைப்பாளரால் தீர்மானிக்கப்படுகிறது. ஆனால் பாட்டெழுதி மெட்டமைக்கிறபோது பாட்டின் நீள அகலங்கள் கவிஞராலேயே தீர்மானிக்கப்படுகின்றன.

மேலட்டை: வைரமுத்து குடும்பம்
வண்ணப்படம், புகைப்படம்:
-உத்ரா
தொகுப்பு: சுப்ரபாலன்

# அந்தரங்கம் ஒரு வானவில்



உயர்ந்த மனச்சாட்சியுள்ள மனிதனுக்கு வாழ்வது முந்திய காலங்களில் எளிதாக இருந்தது. வயல்வெளியில் தனிப்பட்ட ஒரு கதிர் சுதந்திரமாய் ஆடி அசைவதற்குக் கிடைத்த வாய்ப்பைப்போல் அது தெளிவாக அறுதியிடப்பட்டிருந்தது. அந்தப்பொறுப்பை நிர்ணயிக்க முடிந்தது. ஆனால் இன்று— பொறுப்புணர்வின் சார்புமையம் தனிமனிதனிடம் இல்லை. பொருள்களிடையே உள்ள தொடர்பில் உள்ளது. மனிதனை விட்டுப் பிரிந்து — தங்களுக்கென்று தனியானதொரு இடத்தை அனுபவங்கள் பெற்றுள்ளன. அவை கலை, இலக்கிய, விஞ்ஞான மேடைகளில் அரங்கேறியுள்ளன. சமூக ஆராய்ச்சிப் பரிசோதனைகளைப் போல் மற்றவர்கள் அனைவரையும் பயன்படுத்திப் பலவித அனுபவங்களை உருவாக்கும் நம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்ட சமூகத் தொகுதிகளில் புதைந்துள்ளன.

நமது இயங்குகளின் மூலம் கிடைக்காத அனுபவங்கள் - காற்றிலே சஞ்சரிப்பது போலப் பரவியுள்ளன.

நாம் கோபம் கொள்ளும் போது நிகழும் சம்பவங்களில் பலர் தலையிட்டு— அதில் நம்மை விடப் பிரதானப் பாத்திரத்தை ஏற்கிறார்கள். நம்மோடு சம்பந்தப்பட்ட உணர்ச்சிகளை கூட சில நேரங்களில் மற்றவர்களைக் கௌரவப்படுத்தும்போது— அந்த உணர்ச்சிகள் நமக்கே சொந்தமென எப்படி வாதிட முடியும்?

குணங்களைத் தாங்கிக் கொள்ள மனிதன் இல்லாமல்—குணங்கள் நிறைந்ததோர் உலகம்— அனுபவிக்க யாரும் இல்லாமலே அனுபவங்கள் நிறைந்த புதிய உலகம் இன்று எழுந்துள்ளது. இலட்சியச் சூழ்நிலையில் மனிதன் எதையுமே அனுபவிக்க முடியாதது போலத் தோன்றுகிறது. தனி மனிதனின் சொந்தப் பொறுப்பு என்கிற கோட்பாடில் ஆறுதல் காண்பதற்குப் பதிலாகப் புதிய உட்பொருள் காணும் சூத்திரங்கள் உருவாகி உள்ளன. மனிதனையே பிரபஞ்சத்தின் மையமாகக் காணும் போக்கு நீண்ட காலமாகத் தடைப்பட்டு — கரைந்து வருகிறது - இதனால் மனிதனின் ஆளுமை குறைகிறது. அனுபவத்தின் முதல் அம்சம் அனுபவிப்பது — செயலின் முதலம்சம் செய்வது எனக் கருதும் நம்பிக்கை வெறும் வர்ண ஜாலக் கனவுதான். கைவிரல் தொடும் எல்லாப் பொருள்களுமே சொந்தமானவை எனக் கருதும் — அந்தரங்க புனிதம் கொண்டவர்களோடு தொடர்பு கொள்ளும்போது உலகமே தனியானதொரு அந்தரங்க உலகமாகி வானவில்போல் ஒளி வீசுகிறது.

தனக்கென்றொரு நிலையான குணமில்லாத விசித்திரப் பிறவிகள் — மாறும் உலகின் தலைவிதியை நிர்ணயிக்கிறார்கள். ஒவ்வொரு நிமிடமும் புதுமை மலரும் போது முரண்பாடுகள் இயற்கையாகவே நிகழ்கின்றன. முரண்பாடு என்பது முரண்பாடல்ல — அதுவே மனித சரித்திரத்தின் வளர்ச்சி.



**நா. காமராசன்**

---



திருப்பரங்குன்றத்தில் உள்ள ஒரு கல்யாண மண்டபத்தின் பெயர்:

''ஸ்ரீவில்லிப்புத்தூர் கோட்டை புறம் வைசிய செட்டியார்களின் உறவின் முறைக்கு பாத்தியப்பட்ட அரு. ச. அண்ணாமலை செட்டியார் சிவகாமியம்மாள் டிரஸ்ட் சார்பில் நிறுவப்பட்ட கல்யாண மண்டபம்.''

ஆதாரம்: ஏர். உழவன். தகவல்: இ. சுந்தரேசன்.

# புதிய மாவட்டங்கள்...

○ பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்

● தமிழ்நாட்டிலேயே பெரிய மாவட்டமாக இருந்த மாவட்டம் ராமநாதபுரம். இப்போது மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்தப் புதிய மாவட்டங்கள் செயல்படத் துவங்க இன்னும் ஒன்றரை வருடங்கள் ஆகலாம்.

● மூன்று நாட்கள் நடக்க இந்த மாவட்ட அமைப்பு பணிகள் துவக்க விழாவில் கருத்தரங்குகள் கலைநிகழ்ச்சிகள் போன்றவை நடந்தன. 22 கட்சிகளைச் சேர்ந்தவர்கள் பேசினார்கள்.

● 7500 சதுர மைல் பரப்பளவு கொண்ட ஹரியானா மாநிலத்தில் 8 மாவட்டங்கள் இருக்கின்றன. ஆனால் 50,000 சதுரமைல் பரப்பளவு கொண்ட தமிழகத்திலோ 16 மாவட்டங்கள் தான் — விழாவில் வெளிப்பட்ட தகவல்.

● அனந்தநாயகி அவர்களும், காமராஜ் காங்கிரஸ் எம். எல். ஏ. பொன்னம்மாளும் விழாவில் காமராஜரைப் பற்றிப் பேசும் போது அழுது விட்டார்கள்.

● ம. பொ. சி. முதல் செங்கம் ஜப்பார் வரை எல்லோரும் புரட்சித் தலைவர், புரட்சித் தலைவர் என்று கூறி முதல்வருக்குப் பாராட்டுரை வழங்கினார்கள்.

● புதிதாக அமைக்கப்பட்டுள்ள ராமநாதபுரம் மாவட்டத்தின் சிறப்பு அனைத்துக் கடலோர தாலுகாக்களும் இந்த மாவட்டத்தோடு இணைந்திருப்பது தான்.

● சேதுபதி மன்னர்களின் வரலாற்றை நெடுஞ்செழியன் நெடுநேரம் விவரித்தார். கூட்டத்தினர் பேசாமல் இருக்கவே 'சுவரில் அடித்த பிண்டம் போல் இருக்கிறீர்களே, கொஞ்சம் கைதட்டினால்தான் என்ன?' என்று கூட்டத்தைப் பார்த்துக் கேட்டார்.

● பழம்பெரும் சுதந்திரப் போராட்ட தியாகி சோமயாஜுலு பேசும் போது கூட்டத்தினர் சத்தமிட்டுக் கொண்டே இருந்தனர். உடனே 'எம். ஜி. ஆர். சத்தமிடுவதை நிறுத்துங்கள்; இல்லையென்றால்

(மூன்று புதிய மாவட்டங்களின் அமைப்புப் பணிகள் துவக்க விழாவில் எம்.ஜி.ஆர். பேசியதிலிருந்து)

● ஒருவரைப் பற்றி நாம் சொன்ன கருத்துக்கள் அவர் மறைந்தபின் எண்ணிப் பார்த்தால் வருத்தமாக இருக்கிறது. பெருந்தலைவர் காமராசரைப் பற்றி நான் ஏதாவது தவறாகப் பேசியிருந்தால் அதற்காக நான் மன்னிப்புக் கேட்கிறேன்.

● எஸ். எஸ். எல். ஸி. தேர்வில் வெற்றி பெறாத மாணவர்களுக்குப் பயிற்சி கொடுத்து அவர்களை வெற்றி பெறச் செய்யத் தமிழ்நாடு முழுவதும் 1000 மையங்கள் ஏற்படுத்தப்பட இருக்கின்றன. ஒரு மையத்திற்கு 4200 ரூபாய் செலவு.

● பதவியில் இருப்பவர்களுக்கும் உயிரோடு இருப்பவர்களுக்கும் சிலை வைக்கக்கூடாது என்று கூறியிருக்கிறேன். என்னிடம் பாசம் கொண்டவர்களோ அல்லது என்னிடம் ஏதாவது காரியம் ஆக வேண்டுமென்றோ

# ...புதிய செய்திகள்



○ இராமநாதபுரம் மாவட்டம்

நான் பேச மாட்டேன்' என்று கூறினார். கூட்டம் அமைதியாயிற்று.

● கவர்னர் குரானா அவர்களின் பேச்சை மொழி பெயர்த்தவர், கன்னாபின்னாவென்று மொழி பெயர்த்தார். கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. பிறகு மொழி பெயர்ப்பவரை மாற்றினார்கள். மாறி வந்தவர், தவறாக மொழி பெயர்த்தது மட்டுமல்லாமல் அவராகவே சில வார்த்தைகள் சேர்த்துக் கொண்டார். கூட்டத்தில் கேலிக் குரல்கள் எழும்பின. எம். ஜி. ஆர். சிரித்துக் கொண்டார்.

● இந்த மூன்று விழாவின் போதும் மேடையின் முன் வீற்றிருந்த அமைச்சர்களிடம் பேசும் போது ஒரு அரசு அதிகாரி காட்டிய பணிவு கூட்டத்தை அவ்வப்போது நகைக்க வைத்துக் கொண்டிருந்தது. கையைக் கட்டி வாயைப் பொத்திக் கொண்டு, நெட்டத்தட்ட தண்டனிட்ட நிலைக்குக் குனிந்து அமைச்சர்களிடம் இவர் பேசிய காட்சிகள் நல்ல நகைச்சுவைக் காட்சிகள் (பின்னால் கேள்விப் பட்டது- அவர் செய்தித்துறையில் உதவி இயக்குனராம்.)

● தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் விழா நடந்த மூன்று இடத்திலும் மேடையிலிருந்து 1 பர்லாங் தொலைவில் (மேடையிலிருப்பவர்கள் பார்க்கும் அளவுக்கு) 'புரட்சி தலைவர் வாழ்க' என்று பெரிய அளவில் மின் எழுத்துக்களால் அமைத்திருந்தது.

—நமது நிருபர்

○ காமராஜர் மாவட்டம்



## "என் காலை வாரப் பார்க்கிறார்கள்!"

நினைப்பவர்கள் எனக்கு சிலை வைக்கக்கூடும். அப்படிச் சிலை வைக்க ஆரம்பித்தால் தமிழ்நாடு பூராவும் என்னுடைய சிலைகள் தான் இருக்கும்.

● டஸ் கட்டணத்தை உலக வங்கி உயர்த்தச் சொல்கிறது. சென்னை நகருக்கு மட்டும் கட்டணம் உயர்த்தப்பட இருக்கிறது.

● ஒரு மாவட்டத்தைப் பிரித்து அலுவலகங்கள், குடியிருப்புக்கள் மற்ற வசதிகளைச் செய்து தர 7 கோடியிலிருந்து 9 கோடிவரை செலவாகிறது. கட்டடங்கள் கட்டவே மூன்று கோடி ரூபாய் செலவாகும்.

● என்னோடு இருப்பவர்கள் சிலர் என் காலை வாரப் பார்க்கிறார்கள். நான் இருந்தும் என்னைச் சிலர் ஒழித்துக் கட்ட நினைக்கிறார்கள். கடமை முடியும் வரை நான் உயிரோடு இருப்பேன்.

● கட்சிக் கட்டுப்பாட்டை மீறிச் செயல்படுகிறவர்கள் வெளியேறி விடுவது நல்லது. ஒரு குடும்பத்தில் கருத்து வேறுபாடு ஏற்படும். அண்ணன் – தம்பிக்குள் சச்சரவு ஏற்படும். அதைப் போய் வெளியே சொல்வது நம்பிக்கைத் துரோகம்.

● கருணாநிதியை அழைத்தால் அரசு விழாவில் அரசியல் பேசுகிறீர்கள் என்கிறார். விழாவில் அரசியல் பேசினால் என்ன? எல்லா துறைகளும் இணைந்து விழா நடத்தும் போது அரசு வருகிறது. அப்புறம் அரசியலும் வருகிறது!



# மூலக் கனல்

நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 16

**ப**ரஸ்பரம் ஒருவர் இரகசியத்தை மற்றவர் காப்பது என்ற அடிப்படையில் அந்த அழகிய இளம் நடிகையும் அவளது தந்தை வயதுள்ள திருமலையும் ஒருவரை ஒருவர் மணந்து கொண்டனர். சண்பகம் இறந்திருந்தது வசதியாகப் போயிற்று. அவளது வருமானத்துக்கும் அவனே அதிபதியானான். மார்க்கெட்டில் புகழும் செல்வாக்கும் உள்ள ஒரு பெரிய நடிகைக்கு அவனே உரிமையாளனானான். அவளைப் படத்துக்கு புக் செய்கிறவர்கள், பிளாக்கிலும், ஒயிட்டிலும் பணம் கொடுக்கிறவர்கள் எல்லோருமே திருமலையை முதலில் சந்தித்தாக வேண்டியிருந்தது. திருமலை அவளுக்கும் அவள் செல்வத்துக்கும், அழகிற்கும் சேர்த்தே எஜமானன் ஆனான். அவனுடைய இந்தப் புதிய பதவிகள் கட்சியில் அவன் செல்வாக்கை அதிகமாக்கின. இயக்க மூலவர்கள் அடிக்கடி சந்திக்கும் இடமாக அவன் வீட்டுத் தோட்டமும், ஏ. சி. அறையும் பயன்பட்டன. அடிக்கடி அங்கே நல்ல விருந்து சமைத்துப் போடப்பட்டது. தலைவருக்கும் மற்றப் பிரமுகர்களுக்கும் தேவையானபோது கார்கள் உபயோகத்துக்குத் தரப்பட்டன. திருவின் செல்வாக்கு மட்டுமின்றிக் கவர்ச்சியும் அதிகமாயிருந்தது. 'இன்ன நடிகையின் புதுக் கணவர்' என்று பெயர் பரவி அதனாலும் அவனைப் பார்ப்பதற்கு எங்கும் ஒரு கூட்டம் கூடியது. அதனால் அவனுக்கே ஒரு நட்சத்திர அந்தஸ்து வந்திருந்தது. ஒரு சூப்பர் ஸ்டாரின் கணவன் என்றால் சும்மாவா? அவன் சில்க் ஜிப்பா, பட்டு வேட்டி, வைர மோதிரம், இண்டிமேட் செண்ட் வாசனை எல்லாம் சூழ வந்தாலே ஒரு சபை கட்டியது. சினிமாப் பத்திரிகைகளில் எல்லாம் அவனைப் பற்றிய கிசுகிசு, தகவல் செய்தி, துணுக்குகள் அதிகமாக வெளிவரத் தொடங்கின. முன்பு இருந்தது போல் இயக்கத்தில் இதை யெல்லாம் எதிர்க்கவோ தடுக்கவோ ஆட்கள் யாருமில்லை. கட்சிக்குள் சேர்க்கப்பட்ட பெருவாரியான ஆட்களே இப்போது அவனால்தான் சேர்க்கப்பட்டனர். சினிமாவுக்குக் கதை எழுத, வசனம் எழுத, பாடல் எழுத, நடிக்க, ஏரியா விநியோக உரிமையைப் பெற என்று விதம் விதமானவர்கள் அவன் சிபாரிசை நாடி வந்தனர். அவனை மதித்துக் கைகட்டி நின்றனர்.

தமிழ் நாடு முழுவதும் இராப் பகலாக ஓடியாடி அலைந்து பணத்தையும், மாணவர்களையும் ஒன்றுதிரட்டி வைக்க முடிந்தது. இந்தி எதிர்ப்புப் போராட்டம் வெடித்தது. காங்கிரஸ் ஆட்சியின் மீதும் கட்சியின் மீதும் பெரிதும் கசப்படைந்த ஆச்சாரியார் போன்ற மேதை கூட இப்பொழுது இந்தி எதிர்ப்பை ஆதரித்தார். காங்கிரஸுக்கு எதிரான அரசியல் கூட்டணி ஒன்று உருவாக வேண்டும் என்று அவரே விரும்பினார். இயக்கப் பேச்சாளர்கள், ஆச்சாரியார், குல்லுக பட்டர் போன்ற பழைய பழகிய அடைமொழிகளை மெல்ல மெல்லக் கை விட்டுவிட்டு மூதறிஞர் ராஜாஜி என்று கொஞ்சம் அதிக மரியாதையோடு பேசத் தொடங்கியிருந்தனர். வேறு சில கட்சிகளும் இடதுசாரி இயக்கங்களும் கூடப் புதிய கூட்டணியை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தன. அடித்தளத்து மக்கள், வர்த்தகர்கள், படித்தவர்கள் எல்லார் மத்தியிலும் அப்போதிருந்த ஆட்சியின் மீது ஒரு வெறுப்பு வளர்ந்து வரத் தொடங்கியிருந்தது. ஆட்சி செல்வாக்கிழந்திருந்தது.

தமிழக மாணவர்கள் இந்தி எதிர்ப்புப் போரில் குதித்தனர். சில கல்லூரிகளின் வளாகத்திற்குள் அரசியல் சட்டத்தையே தீயிட்டுக் கொளுத்துகிற அளவு மாணவர்கள் வெறியோடிருந்தனர். மாநிலத்தின் எல்லா நெடுஞ்சாலைகளிலும் கார்கள், வாகனங்கள் நிறுத்தப்பட்டு, பெட்ரோல் சேகரித்து அதைக் கொண்டு எரியூட்டல்களில் ஈடுபட்டனர். ரயில்களும் பஸ்களும் எரிக்கப்பட்டன. சாலைகள் மறிக்கப்பட்டன. வாகனங்களையும் ரயில்களையும் நிறுத்தி 'இந்தி அரக்கி ஒழிக' 'வம்பாடி இந்தி ஒழிக' என்றெல்லாம் தாரினால் எழுதினார்கள். வாழ்க்கையே ஸ்தம்பித்தது. கல்வி நிலையங்கள் கலவர நிலையங்களாயின. துப்பாக்கிப் பிரயோகங்களில் உயிர்ச் சேதங்கள் ஏற்பட்டன. சில இடங்களில் போலீஸ்காரர்கள் உயிரோடு கொளுத்தப்பட்டனர். அதற்கு முன்பு ஆச்சாரியார் ஆட்சியில் இருந்த காலத்தில் தாரினால்

இந்திப் பெயர்ப் பலகையை அழித்தபோது வன்முறைகள் நிகழ வாய்ப்பின்றி அதை அவர் சமாளித்தார். இப்போதோ இரண்டு தரப்பிலும் வன்முறைகள் நிகழ்ந்தன. கை மீறிப்போன நிலைமையைச் சமாளிக்கத் தெரியாமல் ஆட்சி திணறியது. தொடங்கி வைத்தவர்களே எதிர்பாராத அளவு நாட்டில் தீப்பற்றி இருந்தது. மொழிப் பற்று மட்டும் இன்றி, விலைவாசி எதிர்ப்பு, சுதந்திரம் பெற்றதிலிருந்து விடாமல் ஆட்சியை நடத்தி வந்த ஒரு கட்சியின் மேல் ஏற்பட்ட சலிப்பு, எல்லாமாகச் சேர்ந்து கொண்டன. இந்தி எதிர்ப்புப் போரின்போது அவன் பம்பரமாக அலைய வேண்டி இருந்தது. பல இளைஞர்கள் தீக்குளித்தார்கள்.

ஒரு நாள் மாலை பள்ளி ஒன்றின் முகப்பில் பஸ்ஸுக்குப் பெட்ரோல் ஊற்றி எரிக்க முயன்று கொண்டிருந்த மாணவர் கும்பலில் நடந்த துப்பாக்கிச் சூட்டில் பக்கத்துக் குப்பத்தைச் சேர்ந்த பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஒருவன் மாட்டிக் கொண்டு இறந்துபோனான். அவன் இயக்கத்தைச் சேர்ந்த குடும்பத்துச் சிறுவனா, படிக்கிற பையனா, போராட்டத்தில் ஈடுபட்டுத் துப்பாக்கிப் பிரயோகத்தில் மாண்டானா, கலவரத்தை வேடிக்கை பார்க்க வந்து நடுவில் சிக்கிக்கொண்டு மாண்டானா என்றெல்லாம் விவரங்கள் தெரியா விட்டாலும் அந்த இளம் சாவை அரசியல் ரீதியாகப் பயன்படுத்திக்கொள்ள முடிவு செய்தான் திருமலை.

''புறநானூற்றுத் தாய் போருக்கு அனுப்பிய சிறுவனை அன்று கண்டோம். இந்தியை எதிர்த்துப் புதிய புறநானூறு படைத்தான் இவன்'' என்று எழுதி இயக்கத் தினசரிகளில் சிறுவனின் படத்தைப்பிரசுரித்து வெளிவரச் செய்தான் திருமலை.

இயக்கத்தைச் சாராத தினசரிகளும், பத்திரிகைகளும் கூட இந்தச் செய்தியைப் பற்றி மிகவும் அக்கறை காட்டி வெளியிட்டன. 'மூளை சிதறி மாண்ட பச்சிளம் பாலகன்' என்றுகூட மிகவும் சென்சேஷனலாக இதை ஒரு பத்திரிகை வெளியிட்டது. சிறுவனின் மரணம் அதை வெளியிட்ட முறை எல்லாமாகச் சேர்ந்து இந்தி



எதிர்ப்புப் போரை நடத்திக் கொண்டிருந்த இளந் தலைமுறையினர் மேல் பொதுமக்கள் அனுதாபம் திரும்பத் துணை செய்தது.

அந்த அனுதாபத்தை மேலும் வளர்க்க எண்ணித் திரு துணிந்து தானே ஒரு காரியம் செய்தான். ஊர் கொந்தளிப்பான நிலையி லிருந்தபோது அவன் கலகம், சண்டை, வம்பு களுக்குப் புகழ் பெற்ற குப்பம் ஒன்றி லிருந்த அந்தச் சிறுவனின் பெற்றோரது குடிசையைத் தேடிச் சென்று அவர்களுக்கு ஆறுதல் கூறி, அதைப் புகைப்படம் பிடித்து ''காளையை இழந்து கண்ணீர் வடிக்கும் கழகக் குடும்பம் பாரீர் — வேளை வரும் இதற்குப் பழிவாங்க'' என்பது போல் திரா விட முழக்கத்தில் எழுத எண்ணினான். இயக்கத்தில் சிலர் அவனை எச்சரிக்கவும் செய் தார்கள். ''அந்தக் குப்பம் ரொம்பப்பொல் லாதவர்கள் நிறைந்த இடம். இறந்த சிறுவ னின் பெற்றோர் நம் இயக்கத்தில் ஈடுபாடு உள்ளவர்கள் என்று தெளிவாகத் தெரிந்தா லொழிய அங்கே போவதும், புகைப்படம் எடுப்பதும் சரியாயிராது'' என்றார்கள். திரு அதைக் கேட்கத் தயாராயில்லை. ''யாரா யிருந்தாலென்ன? நாம போயி பண உதவி செய்து போட்டோப் பிடிச்சு நம்ம ஏடுகளில் போட்டுட்டா அப்புறம் தானே நம்மவர்கள் ஆயிடுறாங்க'' என்று சமாதானம் சொல்லி விட்டுக் கிளம்பினான் திரு. 'பணமும் அநுதாப உணர்ச்சியுமே குப்பத்து மக்களை வசப் படுத்தித் தங்கள் பக்கம் ஏர்ப்பதற்குப் போதுமானவை என்று எண்ணினான் அவன். பையன் குண்டடி பட்டு இறந்த சமயத்தில் அந்த பஸ் எரிப்பு முயற்சியில் ஈடுபட்ட தங்கள் இயக்க மாணவர்களை ஒவ்வொரு வராக விசாரித்தபோதுகூட அந்தச் சிறுவன் எப்படித் தங்கள் கூட்டத்துக்குள் கலந்தான் என்பதை அவர்களால் கூற முடியவில்லை. எப்படியோ பிணம் விழுந்து விட்டது. விழுந்த பிணத்தைத் தங்கள் இயக்கத்துக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொள்ள வாய்ப் பிருக்கிறது என்று திருமலை திட்டமிட்டான். அவனுடைய நாடக ரூபை பிரமாதமாகக் கற் பனைசெய்துதிட்டமிட்டது. 'சிறுவர்பெரியவர் என்று பாராமல் ஈவு இரக்கமற்று மக்களைக் கொன்று குவிக்கிறது அரசு' என்பதாக ஒரு பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக் கும் முயற்சியில் போராடியவர்கள் சார்பில் திருமலை ஈடுபட்டிருந்தான்.

ஓர் இரண்டாயிரம் ரூபாய் ரொக்கத்தை யும் எடுத்துக் கொண்டு, உதவியாளன் கன் னையாவையும் துணைக்கு அழைத்துக்கொண்டு காரில் அவன் அந்தக் குப்பத்துக்குப் போனான். இறந்துபோன சிறுவனுடைய பெற்றோரின் குடிசை குப்பத்தின் உள்ளே நடுப் பகுதியில் இருந்தது. உள்ளே போவதற்குச் சேறும் சகதியும் மேடும் பள்ளமுமான ஒற்றையடிப் பாதைதான் இருந்தது. காரை வெளியே சாலையிலேயே விட்டு விட்டு அவனும் கன்னை யாவும் இறங்கி நடந்தார்கள். சில்க் ஜிப்பா வும் சரிகை வேட்டியும், செண்ட் வாசனை யும் கமகமக்க ஒரு புதிய ஆளும் கையில் தோல் பையுடன் அவனைப் பின்தொடர்ந்து மற்றொருவனும் போவதைப் பார்த்துக் குப் பத்து வாசிகள் கொஞ்சம் வெறிப்பதுபோல்

# ஆமை புகுந்த வீடும்

● திரைப்படங்களில் தமிழை இழிவுபடுத் தும் செயலுக்கு முதல்வர் எச்சரிக்கை செய் ததில் என்ன தவறு இருப்பதாகக் கருதிக் கொண்டு இப்படி இரண்டு பக்கங்கள் கேலிச் சித்திரங்களை வெளியிட்டிருக்கிறீர்களோ தெரியவில்லை.

சென்னை—57 இரணியல் 'சலே.'

● எங்களை முதல் பக்கத்திலேயே விலுந்து விலுந்து சிரிக்க வைத்த உங்களுக்கு எங்கள் பொன்னான வாழ்த்துக்கள்.

கப்பியாம்புலியூர். மங்களா சேஷாத்ரி.



● பால் வழியும் பள்ளிப் பாலகர்களை 'கல்கி' அட்டையில் பார்த்த போது அடைந்த ஆனந்தம் கொஞ்ச நஞ்சமல்ல.

ஸ்ரீரங்கம். ஆர். கோபாலன்.

● 15.7.84 இதழ் கல்கி அட்டைப் படத்தை அலங்கரித்த ஷ்ரைன் வேளாங் கன்னி பள்ளி மாணவ, மாணவியர் வண்ணப்படம் கண்டேன். கட்டுரையில் பள்ளிகளில் குழந்தைகளின் நிலையையும், பள்ளி கெடுபிடிகளையும், பெற்றோர் பல ருடைய எண்ணங்களையும் மிக உண்மையான வருத்தத்துடன் வெளியிட்டிருந்தீர்கள்.

மற்ற பள்ளிகள் எப்படியோ, வேளாங் கன்னியில் படிக்கும் குழந்தைகள் படம் இந்த குறிப்பிட்ட தங்கள் கட்டுரைக்குப் பொருந்தாமல் உள்ளது.

சென்னை—33. திருமதி ரேவதி சங்கரன்.

(கட்டுரை பொதுநோக்கில் எழுதப்பட்டதேயொழிய குறிப்பிட்ட எந்தப் பள்ளியையும் கருத்தில்கொண்டு அல்ல -ஆசிரியர்)

● ''போட்டோ பிடிக்க வாரீகளா'' முருந்தன் எழுதிய நகைச்சுவைப் படைப்பை

இருந்தது. தாங்கள் போக வேண்டிய குடிசையைப் பற்றி விசாரித்தபோது, ''சின்னப் பையன் துப்பாக்கிக் குண்டு பட்டுச் செத்தானே அவங்க குடிசையைத்தானே கேட்கிறீங்க?'' என்று அங்கிருந்தவர்களே பதிலுக்கு விசாரித்தனர். அப்படி விசாரித்த ஒரு கிழவனிடமே அந்தக் குடும்பம் பற்றிய மேல் விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டுவிட்டான் திருமலை. 'அந்தக் குடும்பம் நாலைந்து மாடுகள் வைத்துக் கறந்து பால் விற்பனை செய்கிற குடும்பம். பாண்டிச்சேரி அருகில் உள்ள மரக்காணத்திலிருந்து சென்னைக்குக் குடியேறிய குடும்பம். பெற்றோருக்கு அவன் ஒரே சிறுவன். டீக்கடைக்குப் பால் வாடிக்கை ஊற்றப் போய் விட்டுத் திரும்புகிறபோது பையன் துப்பாக்கிச் சூட்டுக்குப் பலியாக நேர்ந்து விட்டது. அரசியலுக்கும் அந்தக் குடும்பத்திற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது.

–இவ்வளவு விவரங்கள் தெரிந்தவுடனே ''பேசாம இப்படியே திரும்பிடலாங்க... சூழ்நிலை சரியாப் படலீங்க.. நாமாகத் தேடிப் போய் அரசியல் பண்ணி வம்பிலே மாட்டிக்க வேண்டாங்க'' என்று கன்னையா திருவை எச்சரித்தான். திரு கேட்கவில்லை. ''நீ சும்மா இரப்பா. உனக்கு அரசியலும் தெரியாது ஒரு இழவும் தெரியாது. இத்தினி பெரிய விஷயத்தை 'பொலிடிகலா கேபிடலைஸ்' பண்ணத் தெரியாட்டி நாம அரசியலுக்கே லாயக் இல்லேன்னு அர்த்தம். அவங்க ஏற்கனவே வேறெந்தக் கட்சியிலாவது இருந்தாத்தான் நமக்குச் சங்கடம். ஒரு கட்சியிலேயும் இல்லேங்கறது நமக்குப் பெரிய வசதி. சுலபமாக் காரியத்தை முடிச்சிடலாம்'' என்று கன்னையாவைக் கண்டித்து விட்டுப் பிடிவாதமாக மேலே சென்றான் திருமலை. பையன் குண்டடி பட்டுச் செத்தது பற்றிய அநுதாபமும், வேதனையும் எல்லாரிடமும் தெரிந்தன. ஆனால் அதுபற்றி அரசியல் ரீதியான பிரக்ஞை யாரிடமுமே இல்லை. குடும்பக் கட்டுப்பாட்டுத் துறை கொடுத்த பண உதவிக்கு ஆசைப்பட்டுப் பையனின் தந்தை சில நாட்களுக்கு முன்புதான் 'வாஸெக்டமி' செய்துகொண்ட விவரத்தையும் சிலர் சொல்லிப் பரிதாபப்பட்டார்கள். யாரோ பண்ணிய கலகத்தில் ஒரு பாபமும் அறியாத பச்சிளம் பாலகன் ஒருவன் பலியாகிவிட்டானே என்ற பச்சாதாபம்தான் எல்லாத் தரப்பிலும் நிரம்பி யிருந்தது. 'பொல்லாத இந்தியை எதிர்த்துப் புதிய புறநானூறு படைத்து விட்டான் ஒரு பைந்தமிழ்ச் சிறுவன்' என்பது போல் எதுவும் இல்லை. திருமலையும் அவனைச் சேர்ந்தவர்களும் ஏடுகளும் அப்படி ஒரு பிரசாரத்தைச் செய்திருந்தார்களே ஒழிய உண்மை இப்படிக் கசப்பானதாக மட்டுமே இருந்தது. கன்னையா எவ்வளவோ தடுத்தும் திருமலை கேட்கவில்லை.. அந்தக் குடிசைக்குள் அவர்கள் நுழைந்தபோதே கொந்தளிப்பாக இருந்தது. திருமலை கையில் இருபது நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து வைத்துக் கொண்டு ஏதோ சொல்ல ஆரம்பித்தான். அழுது அழுது முகம் வீங்கி தலைவிரி கோலமாய் இருந்த சிறுவனின் தாய் ஹிஸ்டீரியா வந்தவள் போல் கத்தியபடியே

## வட்டமேஜை



படித்ததும் வயிறு வலித்தது. அரசாங்கத்தின் கையாலாகாத்தனத்தை எண்ணி மனம் நொந்தது.

பாசலூர், ஆர். நாகராஜன்.

● அரசியல் சூதாட்டம் என்ற பெயரில் ஆளுநர் ஜக்மோகன் ஃபாரூக் அப்துல்லாவைப் பந்தாடிவிட்டார். இவர் டில்லியில் ஆளுநர் என்ற போர்வையில் என்ன சதிராட்டம் ஆடி இருக்கிறார். 1976–ல் அவசர நிலைமையின் போது இவரும் போலீஸ் கமிஷனராக இருந்த பிந்தரும் ஆடாத ஆட்டமா?

சென்னை–56, டாக்டர் நாவலர் தாசன்.

● 8.7.84 கல்கி இதழ் தலையங்கத்தில் சாண் ஏறி முழம் சறுக்கும் பொதுத்துறை நிறுவனங்களின் நிலையைப் படம் பிடித்துக் காட்டியதற்கு நன்றி.

16,000 கோடி ரூபாயைப் பொதுத்துறை நிறுவனங்களில் முடக்கி வைத்து ஆண்டு தோறும் பல கோடிக்கணக்கான ரூபாய்களை நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் 'இந்தப் பொருளாதார அமைப்பு தேவைதானா?

ஒரு வர்த்தகப் பிரமுகர் கூறினார்: ''அரசாங்கத்தை நடத்தவேண்டிய ஆட்சியாளர்கள் வியாபாரத்தில் புகுந்தார்கள். இதனால் அரசாங்கமும் கெட்டது; வியாபாரமும் கெட்டது. வியாபாரம் தான் ஆட்சியாளரின் முக்கிய குறிக்கோள் என்றால் அரசாங்கத்தையாவது வியாபாரிகளிடம் விட்டுவிடுங்கள்.

'''வியாபாரிகளிடம் அரசாங்கத்தை விடுவதா?' என்று கேட்பீர்கள். நமது நாட்டை ஐம்பது ஆண்டுக்காலம் அந்நிய வியாபாரிகள் (கிழக்கிந்திய கம்பெனியார்) ஆளவில்லையா? அவர்கள் போட்டு விட்டுப் போன அஸ்திவாரத்தில் தானே இன்றைய ஆட்சி இயங்குகிறது. அந்நிய வியாபாரிகளிடம் ஐம்பது ஆண்டுக் காலம் ஆட்சியை ஒப்படைத்த மக்களிடம் இந்திய வியாபாரிகள் பத்து ஆண்டுகளாவது ஆள்வதற்குக் கேட்க உரிமை இல்லையா?''

ஆலடியூர், வெள்ளைக்கால் இரா. கந்தையா.

(கடைசிக்கடிதம் பரிசு பெறுகிறது)

## வியாபாரத்தில் இறங்கிய அரசும்

'பாவிகளா என் செல்வத்தைக் கொன்னுப் புட்டீங்களே' என்று கட்டை விளக்குமாற்றை எடுத்துக் கொண்டு அவர்கள் மேல் பாய்ந்து விட்டாள். பையனின் தந்தை வெட்டரிவாளை எடுத்துக் கொண்டு பாய்ந்தான். காரண காரியங்களை விளக்கி, அவர்களைச் சமாதானப்படுத்துவதற்குத் திருமலைக்கோ, கண்ணையாவுக்கோ அவகாசமில்லை. இவர்கள் பஸ்ஸை எரித்ததனால்தான் ஒரு பாவமும் அறியாத தங்கள் பையன் குண்டடி பட்டுச் செத்தான் என்ற உணர்வே அங்கு மேலோங்கியிருந்தது. விளக்குமாற்றுப் பூசையுடனும் தோளிலும் முதுகிலும் சிறுசிறு வெட்டுக் காயங்களுடனும் அவர்கள் அங்கிருந்து தப்புவது பெரும் பாடு ஆகிவிட்டது. கார் மேலும் சரமாரியான கல்லெறி. இரண்டு நாள் தனியார் மருத்துவ மனை ஒன்றில் சிகிச்சை பெறும்படி ஆயிற்று. ஆனால் இயக்க ஏடுகளில் மட்டும், 'சிறுவனை இழந்த பெற்றோர்க்கு உதவி புரியச் சென்றவர்கள் மீது காங்கிரசார் கொலை ஆவேசம்' என்று தான் செய்திகள் வந்தன. போராட்டம் முடிந்தும் கூட 'மொழிப் போரில் உயிர் நீத்த முத்தமிழ்ச் சிறுவன் தியாகி முருகன்' என்றே இயக்க ஏடுகள் அழைத்து வந்தன. 'ஒரு பொய்யைத் திரும்பத் திரும்ப வற்புறுத்தினால் அது விரைவில் உண்மையாகி விடும்' என்பதில் அபார நம்பிக்கையோடு செயல்பட்டான் திருமலை. மொழிப் போரில் கிடைத்த வெற்றி அவர்கள் பலத்தை அவர்களுக்கு உணர்த்தியிருந்தது. மூதறிஞரின் புதிய கூட்டணி ஒருவகை அரசியல் மரியாதையையும் அங்கீகாரத்தையும் அவர்களுக்குத் தேடித் தர ஆரம்பித்திருந்தது.

(தொடரும்)

# உங்கள் எதிர்காலம்... உங்கள் கைகளில்தான் இருக்கிறது-என்கிறார்கள்

## கைரேகை வல்லுனர்களும் ஜோசியர்களும்

'ஒவ்வொரு மனிதனும் தானே தன் எதிர்காலத்தின் அமைப்பாளன் ஆகிறான்' என்பது பழமொழி.

இது உண்மைதான். வாழ்க்கை சோதனைகளும் சிக்கல்களும் நிறைந்தது. இவற்றை வெற்றி கொள்ள திட்டமிடுதல் அவசியம்.

அன்றாட வாழ்வை நிர்வகித்து நடத்திச் செல்லவும் திட்டமிட வேண்டும்.

சேமித்தல் அன்றாட கடமைகளை ஆற்ற உதவுவதோடு, எதிர்பாராத சிக்கல்களை எதிர்கொள்ளவும் உதவுகிறது.

பாங்க் ஆஃப் தஞ்சாவூர் உங்கள் வரவு, செலவை திட்டமிட உதவுவதோடு, உங்களுக்குத் தற்காலத்திலும், பிற்காலத்திலும் பயன்தரும் விதமாய் சேமிக்க உதவுகிறது.

இன்றே எங்கள் கிளைகளுள் ஒன்றை அணுகி பல்வேறு திட்டங்கள் பற்றிய விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். ஒரு பொருத்தமான திட்டத்தைத் தேர்ந்தெடுத்து உங்கள் எதிர்காலத்தை உருவாக்குவது உங்கள் கையில்தான் இருக்கிறது.




பாங்க் ஆஃப் தஞ்சாவூர் லிமிடெட்-உங்கள் எதிர்காலத்தை வளமாக்க கை கொடுத்து உதவுகிறது.




**பாங்க் ஆஃப் தஞ்சாவூர் லிமிடெட்,**

பதிவுபெற்ற அலுவலகம் : 1087, மிஷன் தெரு, தஞ்சாவூர் 613 001

S. சொக்கலிங்கம்
ஜெனரல் மானேஜர்

B. K. மாதவன்
சேர்மன்

# விருகம்பாக்கத்து வரதராஜர்





✖ ஆலிலை கண்ணன்

ஏகாதசி திதி. அதிகாலை வேளை. நல்ல மழை பெய்து கொண்டிருக்கிறது. விருகம் பாக்கத்தில் குடிகொண்டுள்ள அருள்மிகு சுந்தர வரதராஜப் பெருமாளை ஸேவிக்க வேண்டுமென்று முதல் நாளே தீர்மானித்திருந்தேன். இதுவரை போயிராத புதிய இடத்துக்கு இந்த மழையில் போவதா என்று ஒரு சிறு தயக்கம். குன்றினால் குடை கவித்த பெருமாளைத் தரிசிக்கச் செல்லும் போது மழை என்ன செய்து விடும் என்ற தைரியத்துடன் கிளம்பி, கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் கோடம் பாக்கத்தையும் தாண்டி காளியம்மன் கோவில் தெருவில் குடிகொண்டுள்ள திரு. சுந்தர வரதராஜப் பெருமாள் கோவிலைத் தேடிச் சென்றேன்.

கோவில்என்று கூறியதால் மாடக்கோபுரமும் நீண்டுயர்ந்த மதிலும் இருக்குமென்று எண்ணக் கூடாது. ஓலைக் கூரை வேயப்பட்ட பாலாலயத்தில் எழுந்தருளியிருக்கிறார் சுந்தர வரதர். இந்தப் பாலாலயம் இந்த ஆண்டு தான் கட்டப்பட்டது. பழுது பட்டு இடிந்துள்ள ஸ்ரீ சுந்தர வரதராஜப் பெருமாள் கோவிலை நன்றாகக் கட்டி மூலஸ்தானம், முன் மண்டபம், கொடி மரம், பலிபீடம் முதலியவற்றைப் பழுது பார்த்துத் திரு மதிலும் எழுப்ப வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள் சில அன்பர்கள்.

'தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்று ஔவைப் பிராட்டியார் கூறியிருக்கிறார். தொண்டர்கள் மனம் வைத்து விட்டால் என்ன வேண்டுமானாலும் சாதிப்பார்கள். கூரை வேய்ந்த கோவிலாக இருந்தால் என்ன? துப்புரவாக இருக்கிறது. பக்தர்கள் குழுமியிருக்கிறார்கள். ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பட்டாச்சாரியார் சுவாமிகள் அர்ச்சனை செய்யவும் அடியார்களுக்குத் தரிசனம் பண்ணி வைக்கவும் காத்துக் கொண்டிருக்கிறார். ஸ்ரீதேவி பூதேவி சமேதராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வரதராஜரின் சந்நிதியில் நிற்கிறோம். பட்டாச்சாரியார் சுவாமிகள் மெல்லிய குரலில் ராகங்களில் இசைத்து பகவானின் நாமங்களைச் சொல்லி நிதானமாக அர்ச்சனை செய்து சொல்மாலை சூட்டுகின்றார். முதிர்ந்த குரலில் உள்ள உருக்கம் நம் நெஞ்சைத் தொடுகிறது. வாத்ய கோஷங்களும், அலங்கார தீபவரிசைகளும், சிற்ப சித்திர விசித்திரங்களும், பரிவார தேவதைகளும், விதம் விதமான



✖ ஊஞ்சலில் மோகினி அலங்காரம்

வாகனங்களும் இங்கு இல்லைதான். ஆனால் ஸ்ரீ சுந்தர வரதராஜப் பெருமானை உள்ளன்புடன் நேசிக்கும் தொண்டர்கள் இங்கே இருக்கிறார்கள்.

> ஆராத மனக்காதல்தொண்டர் தங்கள்
> குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி
> ஆராத மனக்களிப்போடு அழுத கண்ணீர்
> மழைசோர நினைந்துருகி ஏத்தி

என்று அழகிய மணவாளன் விஷயமாக ஸ்ரீகுலசேகரப் பெருமாள் அருளிச் செய்த வரிகள் ஞாபகம் வருகிறது.

கோவில் இந்து அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. முக்கியமான விழாக்களையும், நித்தியபூஜை முதலிய கைங்கர்யங்களையும் ஸ்ரீராமானுஜ பக்த ஜன கைங்கர்ய சபை அங்கத்தினர்கள் முன்னின்று நடத்தி வருகிறார்கள்.

திரு. ஸ்ரீநிவாஸ பட்டாச்சாரியார் பெருமாளுக்கு விதம் விதமாக அலங்காரம் செய்வதில் வல்லவர். நவராத்திரி முதலிய விசேஷ தினங்களில் தமர் உகந்த உருவமாகவே பகவானை மாற்றி விடுவார். (தமர் என்ற வார்த்தைக்கு தம்மிடம் ஈடுபாடுள்ள அடியார்கள் என்று பொருள்.) பக்தர்கள் ஆலிலைக் கண்ணனாகத் தரிசிக்க விரும்புகிறார்களா? இன்று பாருங்கள். அகில உலகையும் மயக்கிய மோகினியாகத் தரிசிக்க

## ஆனந்தி

வேண்டுமா இதோ பாருங்கள். யசோதையின் மடியில் சாய்ந்து கதை கேட்கும் குழந்தையாகப் பார்க்க ஆசையா, பார்த்துக் கொள்ளுங்கள். ஸ்ரீருக்மணி மணாளனாகக் கண்டு களிக்க வேண்டுமா? அப்படியே காணலாம். இப்படியெல்லாம் பகவானுடைய ரூப லாவண்யங்களிலும் பல கோலங்களிலும் மனத்தைப் பறி கொடுத்த பெரியவருக்கு ''ஸ்ரீ பாஞ்சராத்ர அலங்கார விசக்ஷணு'' என்ற பட்டம் கொடுத்துக் கௌரவித்திருப்பதில் அதிசயமே இல்லை. இன்னொரு அதிசயம் என்னவென்றால் அவரே பெருமாளுக்கு வேண்டிய எல்லா அலங்காரப் பொருள்களையும் சேகரித்து வைத்திருக்கிறார். யார் ஆசைப்பட்டாலும் தமர் உகந்த தெய்வமாக்கிக் காட்ட எப்போதும் சித்தமாக இருக்கிறார்.

கோவிலின் தொன்மை தெரியவில்லை. சுமார் ஆயிரம் ஆண்டுகள் இருக்கலாமென்று கூறுகிறார்கள். எந்த அரசன் காலத்தில்கட்டியதோ! எந்த மகான் பிரதிஷ்டை செய்தாரோ! காஞ்சி வரதராஜப்பெருமாள் கருட சேர்வை நடக்கும்போது இங்கேயும் பல நூற்றாண்டுகளாகக் கருட சேர்வை நடைபெற்று வந்திருக்கிறது. கோவிலைச்



✖ ஸ்ரீதேவி பூதேவி ஸமேத ஸ்ரீ சுந்தர வரதராஜப் பெருமாள்



✖ யசோதை மடியில் கண்ணன்



✖ ஸ்ரீரங்கநாதன் சயன திருக்கோலம்

### டாக்டரைக் குணப்படுத்திய நோயாளி



லண்டன் மருத்துவமனையில் பணிபுரியும் டாக்டரின் தொண்டையில் ஏதோ சிக்கிக் கொண்டதால், பெரும் அவதியுற்றார். ஆஸ்பத்திரி நோயாளி ஒருவர் அருமையான யோசனை கூறினார். அதன்படி, ஒரு மெல்லிய நைலான் நூலில் சிறிதளவு ரொட்டித் துண்டைக் கட்டித் தொண்டைக்குள் விட்டனர். பிறகு வேகமாக வெளியே எடுத்தபோது, ரொட்டித் துண்டில் ஒட்டிக் கொண்டு வந்தது என்ன தெரியுமா? பல்தேய்க்கும் பிரஷ்ஷில் உள்ள ஒரு மயிர்! ஆனந்தம் தாங்க முடியாத டாக்டர் — அந்த நோயாளிக்கு இலவசமாகவே வைத்தியம் செய்தாராம்.

திருச்செங்கோடு. ப. கந்தசாமி.

---

சுற்றியுள்ள பல ஏக்கரா நிலங்கள் கோவிலுக்குச் சொந்தமானது என்றும் நாளடைவில் குடியிருப்புக்களும் மார்க்கெட்டும் தோன்றி விட்டன என்றும் ஓர் அன்பர் கூறினார்.

1936—ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் நடந்த கருட சேர்வை உற்சவப் பத்திரிகையைக் காட்டினார்கள். அப்போதே 'விருகம்பாக்கம் கிராமவாசிகளான பக்தகோடிகள் ஸ்ரீசுந்தர வரதராஜ சுவாமி ஸன்னதி வெகு காலமாகப் புராதனமாக இருந்தும் மத்தியில் சில காலமாய் பரிபாலகர்களின்றி மிக்க ஜீர்ணமாகிவிட்டபடியால் ஸன்னிதானத்தை ஜீர்ணோத்தாரணஞ்செய்து உத்ஸவாதிகள் செம்மையாய் நடத்த வேணுமென்று எண்ணங்கொண்டு 'முயற்சிகள் செய்து வந்திருக்கிறார்கள். ஐம்பது ஆண்டுகளாக அப்படியே இருக்கிறதே என்று நெஞ்சத்தில் தாபம் உண்டாகிறது.

தமிழகத்தில் கோவில்களை வைத்தே வாழ்க்கை முறையும் பண்பாடும் அமைந்திருக்கது. இந்த மகத்தான பாரம்பரியம் நமது காலத்தில் சிதறுண்டு போய்விடக் கூடாது. ஒரு பக்கம் புதிய கோவில்கள் எழும்புகின்றன. இன்னொரு பக்கம் கோவில் சொத்துக்கள் கொள்ளை போகின்றன. விலை மதிக்க ஒண்ணாத சிலைகளைக் கடத்தும் பாதகம் நடக்கிறது. 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என்று வேதனைப்படுகிறோம்.

இடிந்தும் சிதிலமாயும் நிற்கும் ஆலயங்கள் நம் நாட்டு சொத்து. அவற்றைப் புதுப்பித்து நித்ய பூஜைகள் குறைவின்றி நடக்கும்படி செய்ய வேண்டியது நம்முடைய முக்கியமான கடமையாகும்.

பாலாலயத்துக்குப் பின்னால் இருக்கும் கோவிலைப் பார்த்த போது பரிதாபமாக இருந்தது. கதவைத் திறந்து மூலவரான பெருமாளைத் தரிசனம் செய்தோம். பூஜைகள் இன்றி, ஒட்டடையும், தூசியும் படிந்து, இருட்டில் இருப்பவரானாலும் ஒரு களையைக் காண முடிந்தது. தேவியரும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியும் கூட இருக்கிறார்கள்.

இந்தத் தலத்துக்கு அருகிலேயே வைணவ சித்தாந்தப் பரம குருவாகிய எம்பெருமானார் ராமானுஜர் அவதரித்த ஸ்ரீபெரும்புதூர் இருக்கிறது.

ஸ்ரீ சுந்தர வரதராஜப் பெருமானின் திருப்பணிக்கு உதவுபவர்கள் அனைவரும் திருமாமகள் தாயாரின் கடைக்கண் வீச்சினால் பெருமையடைவார்கள்.

தயரதன் மதலையாகி தவமுனி வேள்விகாத்து
கயல்விழி சீதைக்காகி கார்முகம்வளைத்தான் தொண்டர்
துயரற பாரின்மீதே சுந்தர வரதன்தோன்ற
அயர்வதேனின்னம் தொண்டீர்.
அடிபணிந் துய்மினீரே ''

(1936—ஆம் ஆண்டு கருடோற்சவப் பத்திரிகையில் இருந்த பாடல்.)

---



# வெள்ளித்திரை

இனிய. பாரதிராஜாவிற்கு,

நல்லராஜபாட்டையாய்த் தேர்ந்தெடுத்து கைகளை வீசி வீசி நடைபோட்டிருக்கிறீர்கள். சில சமயங்களில் ராஜநடைதான்.

உபன்யாச அப்பா, மூத்த மகள் 'தவறிப்' போன செய்தியை தந்தியில் கண்டு தவிக்கும் போது இளையமகளுக்கு வாழ்வளிக்கிற மாதிரி கதாநாயகன் வந்து நின்றவுடன், 'தரித்திரத்தை தந்தியில் அனுப்பிவிட்டு தர்மத்தை தாமதமா அனுப்பிட்டியே' என்று உருகுகிறீரே ...

தளர்ந்த நடையும் அறுந்த செருப்புமாய் வருகை தந்து தகாத வார்த்தைகளைப் பெற்றுக் கொண்டு, தொண்டைக் குழியில் தண்ணீரோடு , துக்கத்தையும் சேர்த்து விழுங்கி விட்டு ஒரேயடியாய் உலகவாழ்வை உதறிவிட்டுப் போகிறீரே!...

ராஜநடை என்று சொல்லவில்லே? இவைதான்.

நாயகி ரேவதிக்குக் காதல் பிறக்கிற காட்சியும் சரி, காலியோ காலியான பெரிய நூலகத்தில் டூயட் ஆரம்பிக்க பல மான பீடிகை போடுவதும் சரி, உங்களுக்கே உரித்தான அந்த வெள்ளை உடை மின்னல் தேவதைகளும் சரி – ஃப்ரேமுக்குப் ஃப்ரேம் பாடல்காட்சிகளில் கூட சிரத்தை எடுத்துச் செய்திருக்கிறீர்கள்.

அந்தக் காதல் - பாடலும், கஸ்தூரி பாடலும் இன்னும் சிறிது நாட்களுக்குக் காற்றை ஆக்கிரமிக்கப் போகின்றன பாருங்களேன்.

இவ்வளவு ராஜநடையைப் போட்டுவிட்டு திடீரென்று ஏன் அந்த விநோதக நடை. யூக்கோ பாங்கில் இருந்து கொண்டு ஐ. ஓ. பி. யில் வேலை செய்வதாகச் சொல்லப்படுகிற கதாநாயகன் முப்ப தாயிரம் கையாடிக் கல்யாணமும் செய் தால் பணத்தைத் திருப்பி வைக்க ஒரு வாரம் டைம் கொடுப்பார்களா என்ன?

இல்லை, கொலையாளி இல்லை என்று தெரிந்த பின்னால், 'நீதான் கொலை செய்ய வில்லையே, பாங்க் பணம் முப்பதாயிரம் போகிறது போ' என்று விடுதலை செய்து விடுவார்களா? எந்த தேசத்து நீதிமன்றத் தில் அந்தத் தீர்ப்பு வழங்கப்படுகிறது ஐயா?

ஏனோ தெரியவில்லை. சில விஷயங் களுக்குப் பின்னால் உங்கள் கைவண்ணங் களில் நகைவண்ணம் தேய்ந்து கொண்டே போகிறது. ஆரம்பத்தில் சமூகைக் குரல் மன்னன் ஜனகராஜிடம், பாண்டியன் மோதுகிறாரே – அந்த இடத்தில் லேசாகச் சிரிக்க முடிகிறது. அப்புறம் படம் முழுக்க உம்மென்ற முகத்துடன் பார்க்கிறபடி வைத்துவிட்டீர்களே.

நீங்கள் பொம்மலாட்டக்காரராய் இருப்ப தால்தானோ என்னவோ யாரும் குறை சொல்ல முடியாத அளவுக்கு நடித்திருக் கிறார்கள். ரேவதி ஒரு மாத்திரை கூடுத லாகவே மெருகேற்றுகிறார். பாண்டியன் சரித்திரம் படைக்க முயலுகிறார். பிரதாப் சில இடங்களில் ஓவர்; பல இடங்களில் ஆற்றல்.

மொத்தத்தில் –

அங்கங்கே, ஆங்காங்கே என்று பீஸ் பீஸாய்ச் சுவைக்க முடிவதோடு சரி. கடைசியில் புதுமைப்பெண் வீட்டைவிட்டு ஏன் வெளியேற வேண்டும்? ஏறக்குறைய கணவன் உணர்ந்து விட்டான் என்ற நிலை வந்த பின்னாலுங்கூட?

உங்கள் மீது நாங்கள் நிறைய நம்பிக்கை வைத்திருக்கிறோம். போனவரை சரிதான். இனிமேலாவது பொய்க்காமல் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ப்ளீஸ்–
நேசங்களுடன்.

–ஜெயமன்மதன்

ஏவிஎம்-ன் புதுமைப் பெண்



# ஆலய தீபம்

மற்றுமொரு நட்சத்திரக் கதை!

குழந்தையின் உயிரா? குடும்பப் பெண் பட்டமா?

இந்த இரு கேள்விகளுக்கிடையில் ஊசலாடி குழந்தையின் உயிரே என முடிவு செய்து ஒரு குடும்பப் பெண் சினிமா நட்சத்திரமாகும் கதை. கணவர் குழந்தையைத் தன்னிடமே தக்க வைத்துக் கொண்டு மனைவிக்கு வாசலைக் காட்டுகிறார். கடைசியில் கணவனும் மனைவியும் ஒன்றாகச் சேரப் போகிறார்களா இல்லையா என்பது பிரச்னை இல்லை. பிரச்னை அடுத்த தலைமுறைக்குத் தாவுகிறது. சினிமா நடிகையின் பெண் என்று தெரிந்தவுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ளத் தயாராய் இருந்த பெரிய இடம் முன் வைத்த காலைப் பின் வைக்கிறது. யாதொன்றும் அறியாமல் காதலித்த நடிகையின் மகள் காதலனைப் பிரிய வேண்டி வருகிறது. அப்புறம் கண்ணீர். அப்புறம் நடிகை சம்பந்தியாக வர இருப்பவரிடம் தனது வாழ்க்கை முறையைத் தெள்ளத் தெளிவாய்க் காட்டியவுடன், சம்பந்தம் செய்ய வந்து பின் வாங்கியவர் தவறை உணர்ந்து திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிற வேளையில் சினிமா நடிகை உயிரை இழக்க, அப்புறம் எல்லோர் கண்களிலும் பொட்டு பொட்டாய் மறுபடியும் கண்ணீர், கன்னத்தில் உப்புக் கரிக்கத் தாய்மார்கள் எல்லோரும் எழுந்து போக வேண்டுமென்று டைரக்டர் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பார் போலும். அந்த சினிமா நடிகை உயிரை இழக்க வேண்டியதன் அவசியம் என்ன என்று இதுவரைக்கும் புரியவில்லை.

ஜெய்சங்கரைக் கடந்த சில நாட்களாய் வில்லனாய்ப் பார்த்துப் பார்த்துத் திகட்டிப் போனதற்கு இதில் மாறுதலாய் ஒரு வேடம். அவரும் பாத்திரம் உணர்ந்து செய்திருக்கிறார்.

முகத்தை விறைப்பாய் வைத்துக் கொள்ள ஒரு ராஜேஷ். மனிதர் ஓர் இடத்திலாவது வாய்விட்டுச் சிரிக்க வேண்டுமே. ஊஹூம். அந்த முறுக்கிக் கொண்ட முகம் கடைசி நிமிஷம் வரை நாய் வால்தான்.

அழுவதற்கு, அதுவும் கரகரத்த குரலில் பிழியப் பிழிய அழுபவருக்கு என்று ஏதாவது ஒரு பட்டத்தை நிச்சயம் வைத்திருந்தால், ஒரு கேள்வி இல்லாமல், புருவம் உயர்த்தாமல் சுஜாதாவிடம் தூக்கிக் கொடுக்கலாம். 'ஓஹோ!' என்று மார்க்கெட் இருப்பதாகப்படத்தில் சொல்லப்படுகிற அளவுக்கு இருக்கிறதா என்ன அந்த அநாவசியக் கண்ணாடியும் இளவயது கடந்த தோற்றமும்?

சிங்கப்பூர் சீமான் மகேந்திரனும், கோட்டு சூட்டு போட்ட பட்லர் மானேஜர் தேங்காயும் கதை பேசுகிறார்களே — இரண்டு ஹீரோ, இரண்டு ஹீரோயின், இரண்டு வில்லன் — கதை. எங்கேயோ கேட்ட மாதிரி இருந்தாலும் சிரிக்க வைப்பதென்னவோ வாஸ்தவம் தான்.

டைரக்டர் சொல்லிக் கொடுத்தபடி டான்ஸ் மூவ்மெண்ட்ஸ் காட்ட சுரேஷ்—இளவரசி. அந்த இளசுகளின் காதலில் மைனஸ் — ஸ்ரீதரின் ஸ்பெஷல் கிளுகிளுப்பு.

முதல் நாள் இளவரசி நர்ஸிங்ஹோம் வாசலில் பொறியில் மாட்டின எலியாய்த் தவித்துப் போவதாகட்டும், அன்றைக்கு இரவு முழுக்கக் கண் விழித்து வீட்டின் இருண்ட மூலையில் உட்கார்ந்திருப்பதாகட்டும், மறுநாள் காலையில் பேப்பர் வந்து விழுவதாகட்டும்—

தடக், தடக் என்று இதயத்துடிப்பு பெரிதாகிக் கொண்டே போகும் காட்சி அது. அந்தநாள் ஸ்ரீதர் என்று சொல்ல வைக்கிற சாம்பிள் காட்சி. ஆனால் பெருங்காய வாசனை மட்டும் போதுமா என்ன?

ஸ்ரீதர் கோபித்துக் கொள்ளாமல் இருப்பதானால் ஒன்று சொல்லலாம். அவர் தற்சமயப் படங்களை நிறைய பார்க்கட்டும். அப்புறம் நிறைய சிந்திக்கட்டும். அப்புறம் நிதானமாய்ப் படம் எடுக்கட்டும். என்ன சரிதானே?

—ஜெயமன்மதன்

## வீட்டு வாடகை

# சட்டம் என்ன சொல்கிறது?




- குடியிருப்பவரிடமிருந்து வீட்டுக்காரர் நியாய வாடகையே வாங்க வேண்டும். நியாய வாடகையை நிர்ணயிக்க சட்டத்தில் விதிமுறைகள் இருக்கின்றன. நியாய வாடகையை நிர்ணயிக்க வீட்டுக்காரர் அல்லது குடியிருப்பவர் மனுப் போடலாம்.

- குடியிருப்பவரிடமிருந்து வீட்டுக்காரர் வாங்கும் வாடகைக்கு ரசீது கொடுக்க வேண்டும்.

- சட்ட விதிகளின்படி வீட்டுக்காரர் ஒரு மாதத்திற்கு மேலான வாடகையை அட்வான்ஸாகப் பெற்றுக் கொள்ளக் கூடாது.

- குடியிருப்பவர் அனுபவிக்கும் வசதிகளைத் தக்க காரணமின்றி வீட்டுக்காரர் தடை செய்யவோ, அகற்றவோ கூடாது: தண்ணீர் வராமல் குழாயை மூடி விடுதல், மின்சார இணைப்பைத் துண்டித்தல், நடைபாதையைத் தடுத்தல் முதலியன.

வாடகை சரியாகத் தராதிருத்தல் மற்றும் வீட்டைச் சரியாகப் பராமரிக்காமல் விணடித்தல் போன்ற காரணங்கள் தவிர வீட்டுக்காரர் வாடிக்கையாளரை காலி செய்யுமாறு சொல்ல வேறு காரணங்களும் உள்ளன.

- வாடகைக்குக் கொடுக்கப்பட்ட வீட்டை, எதற்காகக் குடிக்கூலிக்குக் கொடுக்கப்பட்டதோ அதற்கு உபயோகப்படுத்தாமல் அதற்குப் புறம்பாக உபயோகித்தல்.

- கட்டடத்தைச் சட்ட விரோதமான, அல்லது ஒழுக்கக் கேடான காரியங்களுக்கு உபயோகிப்பது.

- குடியிருப்பவர்களின் உபத்திரவமான நடத்தை.

- வீட்டுக்காரரின் உரிமையைக் குடியிருப்பவர் மறுப்பது.

- ஏன், வீட்டைத் தக்க காரணமின்றி நான்கு மாதங்களுக்கு மேல் குடியிருக்காமல் வைத்திருப்பது கூட குடித்தனக்காரரைக் காலி செய்யச் சொல்வதற்குத் தக்க காரணம்தான்.

சில குடித்தனக்காரர்களுக்கு அளிக்கப்படும் சலுகைகள்:

- குடியிருப்பவர் அரசாங்கத்தில் அத்தியாவசிய பணி என்று அறிவிக்கப்பட்ட பணியில் வேலை செய்பவரானால் அவர் பேரில் மனுப் போடக் கூடாது. (வீட்டின் சொந்தக்காரரும் அவ்வித பணியில் இருப்பின் தடையில்லை.)

- அரசாங்கத்தால் அங்கீகாரம் பெற்ற கல்விக் கூடம் நடத்தப்படும் கட்டிடங்களையும் காலி செய்ய மனுப்போடக் கூடாது.

இதுபோன்ற அத்தியாவசிய தகவல்களைத் தவிர சிக்கலான சட்ட நுணுக்கங்களையும் அந்த நுணுக்கங்கள் சம்பந்தப்பட்ட சில வழக்குகளையும் 'பொது மக்களுக்கான சட்ட விளக்கங்கள்' (பகுதி இரண்டு நூலில்) எளிய முறையில் எழுதியுள்ள நூலாசிரியர் எம்.பி. சுப்ரமணியன், இருள் சூழ்ந்த சட்டக் காட்டினுள் நம்மை வழிகாட்டி அழைத்துச் செல்கிறார் எனலாம்.

—சிதாரவி.

பொது மக்களுக்கான சட்ட விளக்கங்கள் பகுதி – 2. விலை ரூ. 6. ஸ்ரீசாந்திமதி நூலகம் சென்னை—600 095.

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)




# PHILIPS

# An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



## 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features – like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

**The Electronic Turntable**

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

**The Dolby Deck**

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

**3 way 3 Speaker bass-reflex system**

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

**Philips – the trusted Indian household name for over fifty years**

OBM/17.87

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
[illegible] 1/75



**சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்**
**இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.**

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள் — அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிரூபணமான ஆண்டிஸெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாறிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

Johnson & Johnson

OBM/2513 TAM